*Kumaraṉ*

*Āram 8, muttu 50*

*August 13, 1931*

Record no. 313

REG. M. NO. 1823. வாரப்பதிப்பு. 16 PAGES

# குமரன்

THE 'KUMARAN' KARAIKUDI.

ஆரம் அ. | காரைக்குடி, பிரஜோற்பத்தி-ஞூ ஆடி-மீ உகூ-உ வியாழக்கிழமை (13—8—31) | முத்து இ.

## ஜோடி சேர்த்தல்.



இது சரியா?



இது சரியா?

வாரப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 6-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு 1-0-0
வருஷம் ஆடிமீ
ஆரம்பம்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

## பொறுக்கு மணிகள்.

பிரிட்டிஷ் இந்தியாவில் தற்போது 75,000 ஏக்கர் நிலங்களில் காப்பி பயிரிடப்படுகின்றது.

0 0 0

அமெரிக்கா, கலிபோர்னியாபிரதேசத்திலுள்ள திருமதி கோட்டா என்பவர், தமது 17—20 வயதுக் கிடையில் 13 கணவரை மணந்தனராம்.

0 0 0

1930-ல் வெளிநாடுகளிலிருந்து அமெரிக்காவுக்கு வட்டியாகவும், யுத்தக் கடன் கிஸ்தியாகவும், மற்றும் சிலவகைகளிலும் வந்த பணம் 1,30 கோடி தங்க டாலர்களாகும்.

0 0 0

கிரிக்கட் என்கின்ற ஆங்கிலப்பந்து விளையாட்டுப் போட்டி முதன் முதல் 1750 ம் வருஷம் ஹாம்ப்ஷயரிலுள்ள ஹாம்பில்டன் என்ற இடத்தில் விளையாடப்பட்டதாம். அதன் ஞாபகார்த்தமாக ஓர் கற்சிலே நாட்டியிருக்கின்றார்கள்.

0 0 0

திருவாங்கூரில் ஒரு காலத்தில் புத்த சமண மதப்பிரசாரங்கள் மலிந்திருந்தனவென்றும் கருநாகப்பள்ளி, கார்த்திகைப்பள்ளி, இடப்பள்ளி என்பன போன்ற "பள்ளி" யால் முடியும் ஊர்கள் சமண புத்தப் பள்ளிகளைக் காட்டுகின்றனவென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள்.

0 0 0

அமெரிக்காவில் மாதர்கள் வதனங்களை அழகு படுத்துவதற்கென ஏற்பட்டுள்ள ஸ்தாபனங்கள், வருடமொன்றுக்கு 10 கோடிபவுன் சம்பாதிக்கின்றன. அழகு செய்வதற்காக சோப் 2,000 டன், முகப்பவுடர்4,00 . டன், ஸ்நான உப்பு 6,000 டன், முகத்தில் பூசிக்கொள்ளும் கிரீம் 50,00. டன் செலவாகின்றது.

0 0 0

சீன ராஜ்யத்தில் ஷாங்காய் நகருக்கருகேயுள்ள ஹியூனன் மாகாணத்தில் பொதுவுடமை கட்சியினர்க்கும் கொள்ளைக் காரர்களுக்கும் மத்தியிலுண்டான கலகத்தில் 4-லட்சம் குடிஜனங்கள் கொல்லப்பட்டனர். சீன ராஜ்ய பிரஜாதிபதியாகிய ஜெனரல் ஜீயாங்கெய்ஷெக் என்பவர் பெரும் படையுடன் கொள்ளைக்காரரைத் தேடப் புறப்பட்டிருக்கிறார்.

0 0 0

மது வெறிஞர்கள் மதுபானத்தை வெறுத்துவிடச் செய்யுமோர திசய வழியை, நியூயார்க் நகரிலுள்ள டாக்டர் எட்வர்ட் கவ்ளஸ் என்பவர் கண்டு பிடித்திருக்கிறார். அதாவது குடிகாரர்களின் மதுவெறி பிறப்பிலேயே அமைந்து விடுகிறதாம். மதுபானமருந்தும் ஆசைப் பெருக்கம் மூளையைச் சூழ்ந்துள்ள பள்ளங்களில் பிரவகிக்கும் ஒருவித நீரினாலுண்டாகிறதாம். அந்த அசுத்தநீரை ரணவைத்தியக் கருவிகளால் நீக்கிவிட்டால், பிரபல குடியர்களும் மதுபானத்தைத் தொலைக்கின்ற வராய் மாறிவிடுவார்களாம்.

இங்கிலாந்தில் 1931ம் வருஷ முதல் மூன்று மாதங்களில் ஜனனம் பெண்ணில் 77,939 ஆணில் 81,888 குழந்தைகளாம்.

0 0 0

ருஷியாவின் வடபாகம் பனிக்கட்டிகளால்மூடப்பட்டிருக்கிறது. அதில் "ரெயின் டீயர்" என்ற ஓர்விதக் கலைமான்களால் இழுக்கப்படும் வண்டிகளை உபயோகிக்கின்றார்கள்.

0 0 0

"ஹிந்து குஷ்" மலைச்சாரலில் பண்டைக்காலத்தில் மண்ணில் புதைந்து கிடந்த பலபுத்தப்பள்ளிகளும், புத்த விக்கிரகங்களும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

இலங்கையின் ஜனத்தொகை 1921 ம் வருடத்திலிருந்து 1931 ம் வருடத்திற்குள்ளாக 8,04,855 பேர்கள் கூடுதலாய் விட்டது.

0 0 0

அதிகமான சந்தோஷம் அதிகமான துக்கத்தை யுண்டுபண்ணுவது போல, அதிகமான குளிர்ச்சி அதிகமான சூடாக மாறுகின்றதாம். கனிகள், கிழங்குகளாகியவற்றை மிகுந்த குளிர்ச்சியான (ஐஸ்) பனிக்கட்டியில் வைத்தால் சூட்டால் வெந்ததுபோல அவை வெந்து விடுமாம்.

0 0 0

சிங்கப்பூர் முனிசிபல் இலாக்காவில் 1930—ம் வருஷத்தில் குப்பை

## ஹிந்து கோயில்.



பஞ்சமன்:—பெண்டாட்டி பிள்ளையோடு வந்திருக்கிறேன். சுவாமி கும்பிட வேண்டும்.

ஐயர்:—நீங்கள் உள்ளே நுழையக்கூடாது. நுழைந்தால் கோவில் தீட்டாகி விடும். ஓடிப்போங்கள்.

ஆபிரிக்கா கண்டத்தில் இருதலைகளையுடைய பாம்புகள் சர்வசாதாரணமாய்க் காணப்படுகின்றன.

0 0 0

பாணத்தால் வாகனங்களைச் செலுத்தும் முறைபுதிதல்ல. 1836-ல் லண்டன் நகரில் ஒருவர் பாணத்தின் மூலம் ஒருவண்டியைச் செலுத்தி சோதனை காட்டினர். மேலும் அதனை அபிவிருத்திசெய்யும் எண்ணத்தோடு பொது ஜனங்களிடம் அவர் பணங் கேட்டபோது ஒரு ஆசிரியர் "பாணத்தால் வண்டியை ஓட்டுவதென்பது மிகப் புதுமையாயிருக்கின்றது. வண்டியில் பாணத்தைச் சேர்ப்பதைவிட, ஒரு பீரங்கியில் அதனைச்சுட்டழித்து விடுவது மேல்" என்று எழுதினாராம்.

சாமான் அள்ளும் செலவுகள் \$341,221,78. அள்ளப்பட்ட குப்பை முதலிய வஸ்துக்கள் 151,507½ டன்கள், இது அந்நகர் (495,818) ஜனத்தொகைக்கு சராசரி ஆள் ஒன்றுக்கு 684 ராத்தல் வீதம் குப்பைக் கழிவுகள் விழுந்ததாம்.

0 0 0

பம்பாய் பார்ஸி கனவானை சர். ஜெஹாங்கீர்காத்தாரி தற்போது பத்தாவது தடவையாக உலகத்தை சுற்றிவருகிறார். சென்ற காற்பத்தேழு ஆண்டுகளாக இவர் யாத்திரை செய்துகொண்டே யிருக்கிறார்.

## விகடத் துணுக்குகள்.

குழந்தை:— கருப்புக் கோழிகள் வெள்ளைக் கோழிகளைவிடத் திறமை வாய்ந்தன. அல்லவா?

தாய்!— ஏன் திறமைவாய்ந்தன வென்கின்றாய்?

குழந்தை:— ஏனென்றால் கருப்புக் கோழிகள் வெள்ளைமுட்டை யிடுகின்றன. வெள்ளைக் கோழிகட்குக் கருப்பு முட்டையிட சக்தியில்லை.

0 0 0

ஒரு தாத்தா தன் மகளுடைய குழந்தையைப் பார்த்து:— கமலம்! நீ எவ்வளவு சீக்கிரத்தில் வளர்ந்து விட்டாய்! ஒரு திங்கட்கிழமை காலையில் நீ பிறந்தாய் என்பது எனக்கு நன்றாக ஞாபகத்தி லிருக்கிறது.

கமலம்:— அதெப்படி தாத்தா! நான் திங்கட்கிழமையே பிறந்திருக்க மாட்டேன். ஏனென்றால் நான் திங்கட்கிழமை தோறும் பள்ளிக்கூடத்துக்கன்றோ போகிறேன்.

0 0 0

தனது ஆசிரியர் கட்டளைப்படி ரிப்போர்ட்டு எடுக்கப் போன ஓர் பத்திரிகை நிருபர், தனது இரு காதுகளிலும் பஞ்சைவைத்து அடைத்துக் கொண்டு கூட்டத்துக்குள் புகுந்தார். அப்போது பிரசங்கியார் ஒருவர்:— ஏனையா! காதை யடைத்துக் கொண்டு கூட்டத்திலிருக்கின்றீர்?

நிருபர்:— எனது ஆசிரியர் கண்ணில் பட்டதை யெல்லாம் நன்றாயெழுதிவிடு;என்று கட்டளை யிட்டார். ஆகவே செவி எதற்கு?

0 0 0

"திறமை என்பது வம்ச பாரம்பரியமாய் வருவதென்பது உண்மையா?

"என்னமோ; எனக்குக் குழந்தைகள் இல்லை"

0 0 0

ஜட்ஜ்:— நீ என்ன நம்பிக்கையில் அந்தக் கன்னக்கோல் திருடனைக் கல்யாணம் செய்தாய்?

பெண்:— தனது சொந்த வீட்டிலும் கன்னக்கோல் வைக்கமாட்டா ரென்ற நம்பிக்கையின் பேரில்.

0 0 0

"நாம் நேற்று மோட்டாரில் சவாரி செய்தோம் என்பது உன் தந்தைக்கு எப்படித் தெரியும்?"

"நன்றாகத் தெரியும்; நேற்று பாலத்தின் சமீபம் ஒருவர் மீது மோட்டாரை ஏற்றி கையைபொடித்தோமே அவர் தான் என் தந்தை"

0 0 0

ஆசிரியர் ஒரு மாணவனிடம்:— உலகில் மிகவும் பயப்படத்தக்க மனிதன் யார்?

மாணவன்:— கணக்கு வாத்தியார்.

0 0 0

ஓர் உபாத்தியாயினி ஒரு மாணவியைப் பார்த்து:— நீ காப்பி அடிக்கும் வழக்கம் வைத்துக்கொண்டிருக்கிறாய்!

மாணவி:—இல்லை நான் காப்பி குடிக்கும் வழக்கம்தான் வைத்துக் கொண்டிருக்கிறேன்.

# இந்தியச் செய்திகள்.

மைசூர் திவான் சர். மிர்ஸா இஸ்மாயில் ஆகஸ்டு 15-ந் தேதி பம்பாயிலிருந்து லண்டனுக்குப் புறப்படுவார்.

0 0 0

ஜூலை 13-ந் தேதி பாடலிபுரத்தில் ஏற்பட்ட வெடிகுண்டு விபத்தால் காயமடைந்தவர்களின் நிலைமை கவலைக்கிடமானதாயிருக்கின்றதாம்.

0 0 0

மைமன்சிங், கூச்பீகார், துப்ரி (அசாம்) இந்த நகரங்களில் ஆகஸ்டு 3-ம் தேதி பூமி அதிர்ச்சி ஏற்பட்டது. துப்ரியில் மூன்றுவது முறையாக ஏற்பட்ட அதிர்ச்சி 1-நிமிஷம்வரை நீடித்திருந்ததாம்.

0 0 0

இராணுவ பயிற்சிசாலை ஸ்தாபிப்பதற்கு இந்த இடம் தகுதியானதா என்பதை நேராக கண்டறியும் பொருட்டு இந்திய ராணுவ தளபதி, ஸடாராவுக்கு ஆகஸ்டு 4-ந் தேதி சென்றிருந்தார்.

0 0 0

எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் மூன்றுவது முறையும் தோமற்போனதால் மனவருத்த மடைந்து, சென்னையில் சம்பந்தன் என்ற மாணவன் அக்கினி திராவகத்தைக் குடித்து மரணமடைந்தான்.

0 0 0

விருதுநகருக்கு மூன்றுமைல் தூரத்திலுள்ள ரோசல்பட்டியில் ஆகஸ்டு 2-ந் தேதி ஏற்பட்ட தீவிபத்தில் 5 வீடுகள் நாசமாயின. இதனால் ரூ. 500 வரை நஷ்டமேற்பட்டதாக தெரிகிறது.

0 0 0

தென்னிந்திய ரயில்வே வேலை நிறுத்த சம்பந்தமாய் ரயில்வே தொழிலாளரில் பலர் கடுங்காவல் தண்டனை அடைந்திருபதால், அவர்களை விடுவிக்க வேண்டி ஒரு தூதுகோஷ்டி 6-ந் தேதி சென்னை கவர்னரிடம் சென்றதாகத்தெரிகிறது.

0 0 0

கல்கத்தா அப்யுதயா பருத்தி மில்லிலும், ராதாக்ருஷ்ணன் பருத்தி மில்லிலும் வேலை செய்த 3000 தொழிலாளிகள், தங்கள் படிச்செலவை குறைத்ததை முன்னிட்டு வேலை நிறுத்தம் செய்து வருகின்றனராம்.

0 0 0

திருவண்ணாமலை லைனில் ஆகஸ்ட்டு 5 ந்தேதி முகையூருக்கும், மாம்பழபட்டுக்கும் இடையில் ஒரு தலையில்லாத முண்டம் கிடந்தது. அதை கூட்ஸ் ரயில்டிரைவர் கண்டு பிடித்து போலீசார் வசம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. இதைப்பற்றிய தகவல் ஒன்றும் விளங்கவில்லை.

0 0 0

இலங்கையில் ஆகஸ்டு 3-ம் தேதி இரவில் திடீரெனபெரும்புயலடித்ததால் கொழும்புவுக்குப் பக்கத்தில் மீன்பிடித்துக்கொண்டிருந்த படகுகள் நாசமாயின. 8 பேர் மாண்டனர். 2 ந்தேதி இரவு பெய்த பெருத்த மழையினால் ரத்னபுரி நகரத்தின் பல பாகங்கள் தண்ணீரில் மூழ்கி விட்டன. பள்ளிக்கூடங்கள் திறக்க வில்லை.

0 0 0

பிரம்மபுத்ரா நதியிலும் யமுனைநதியிலும் ஜலப்பிரவாகம் அதிகரித் திருப்பதால் வங்காளத்தில் என்றுமில்லா வெள்ளம் ஏற்பட்டிருக்கிறது. சிராஜ்கஞ்ச், ராஜபாரி, டாக்கா, மாணிகஞ்ச் முதலிய பட்டணங்கள் நீரில் மூழ்கிக்கிடக்கின்றன. போக்ரா பிரதேசத்தில் 500 சதுரமைல் வரை அதிக சேத மேற்பட்டிருக்கிறது. ஜனங்கள் மரத்திலும் வீடுகளின் கூரைகளிலும் தங்கி யிருக்கின்றனர்.

0 0 0

விலாசபுரி ஜில்லாவைச் சேர்ந்த சோட்டா என்னும் ஊரில் தாசில்தாரும், போலீசாரும் புகுந்து சர்க்காருக்கு சொந்தமான நிலத்தில் வீடுகளும், குடிசைகளும் கட்டியிருப்பதாக கூறி அவைகளை எல்லாம் இடித்து தரையோடு தரையாக்கி விட்டார்கள். ஜனங்கள் போதிய முன்னறிக்கை ஒன்றும் கொடுக்காமல் அதிகாரிகள் அமல் நடத்தியுள்ளாரென்றும், இதனால் பல ஏழை ஜனங்கள் வீடின்றி தவிக்கின்றாரென்றும் உள் நாட்டு மந்திரிக்கு தந்தி கொடுத்திருக்கிறார்கள்.

சிம்லா டிப்டி கமிஷனர் திரு. கிரம்புக்கு 1 வருஷ ரஜா கொடுத்திருக்கின்றனர்.

0 0 0

காஷ்மீரத்தில், சமீபத்தில் ஏற்பட்ட கலகங்களுக் கெல்லாம் மூலகாரணஸ்தராகிய அப்துல்காதரை காஷ்மீர் சமஸ்தானத்தை விட்டு காடுகடத்தி விட்டார்கள்.

0 0 0

வங்காள சட்டசபையில் ஆகஸ்டு 4—ந் தேதி சபைகலையுமுன் சபையினர், பஞ்ச நிவாரணத்திற்காக 30 ஆயிரம் ரூபாயும், விவசாயிகளுக்கு கடன் கொடுத்துதவுவதற்காக 6 லக்ஷம் ரூபாயும் அனுமதித்தனர்.

0 0 0

பாரிசிலிருக்கும் பிரஞ்சு குடியேற்ற நாட்டு மந்திரி இம்மாதம் 22-ந் தேதி சுமார் புதுச்சேரி வருவதாக தெரிகிறது. இதுவரை இந்தியாவிற்கே எந்த பிரஞ்சு மந்திரியும் வந்ததுகிடையாது.

0 0 0

ஆகஸ்டு 4—ந் தேதி வங்காள சட்டசபையில் உள்நாட்டு மந்திரி ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில், சட்டமறுப்பு இயக்கத்தின் போது இம்மாகாணத்தின் பல ஜில்லாக்களிலும் 1,876 துப்பாக்கிகளை கைபற்றியதாக அறிவித்தார்.

0 0 0

ராமனுதபுரம் ஜில்லாவில், ராமனுதபுரம், தனுஷ்கோடி, இராமேஸ்வரம், குருபுல்லாணி, தேவிபட்டணம் முதலிய யாத்திரை ஸ்தலங்களில் காலரா முதலிய தொத்து நோய்களேற்பட்டு உயிர்சேத மதிகப் பட்டுவருகின்றது.

0 0 0

வங்காள வாலிபரொருவர் தம்மாமனுருக்குச் சொந்தமான விமானமொன்றில் சென்றவாரம் கல்கத்தாவை விட்டு புறப்பட்டு பூரிக்கு சென்றார். பின்னர் புயல் அடித்ததையும் பொருட்படுத்தாமல் அன்றே கல்கத்தாவுக்கு திரும்பினார்.

0 0 0

விருது நகர் முனிசிபாலிடியார் வருஷம் 500 ரூபா செலவில் ஓர் புத்தகசாலை ஏற்படுத்தியிருக்கின்றனர். ஆரம்பவிழா ஆகஸ் 2-ந் தேதி மாலை முனிசிபல் ஆபீஸ் "இராஜாபில்டிங்" ல் சிவகாசி சப்கலெக்டர் திரு. பி. என். ராமசாமிஐயர் ஐ. சி. எஸ். ஆரம்பித்து வைத்தார்.

0 0 0

சென்னை சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவில் இவ்வருடம் கவர்னர் மொத்தம் 1755 பேர்களுக்கு பட்டம் வழங்கினார். அவர்களில் 1230 பேர் நேர்முகமாகவும் மற்றவர் "ஆப்ஸென்ஷியா" விலும்பட்டம் பெற்றவர்கள். பி. எல். பட்டம் பெற்றவர்களின் எண்ணிக்கை 697. அவர்களில் பெண்கள் 64. பி. ஏ. சரித்திரத்தில் முதல் வகுப்பில் தேறிய இருவரும் பெண்களே யாவர்.

0 0 0

மைசூர் மஹாராஜா தமது ஹிமாலயா பிரயாணத்தை முடித்துக் கொண்டு அல்மோரா வந்திருக்கின்றார். அங்கிருந்து புறப்பட்டு புனாவந்து சில நாள் தங்கி தம் ராஜ்யத்திற்கு திரும்புவார். மைசூர் சர்வகலாசாலை அத்யட்சகரான மகாராஜா அவ்வதிகாரத்தை தற்காலிகமாக யுவராஜாவிற்கு கொடுத்திருக்கிறார். இம்மாதம் 28-ந் தேதி நடைபெறும்பட்டமளிப்பு விழாவிற்கு யுவராஜ தலைமை வகித்து பட்டங்கள் வழங்குவார்.

0 0 0

பார்லிமெண்டில் சில நாட்களுக்கு முன்பு சண்டையுண்டாவதற்கு காரணமாயிருந்தவரும், சபைக்கு வரவொட்டாமல் தள்ளி வைக்கப்பட்டவருமான திரு. மாக்கவர்ன் எனபவர் கிளாஸ்கோ மைதானத்தில் அனுமதியின்றிப் பிரசங்கம் செய்த குற்றத்திற்காக மூன்று பவுன் அபராதம் விதிக்கப்பட்டார். தவறினால் 20 நாள் காவல் தண்டனை அனுபவிக்க வேண்டுமென தீர்ப்பில் கூறப்பட்டது. திரு. மாக்கவர்ன் "நான் அபராதம் தரமாட்டேன். சிறைக்குப் போவதையே விரும்புகிறேன்" எனக் கூறினார்.

கரைக்கால் மாகாணாதிபதி திரு. வெண்டோம், கல்கத்தாவிற் கருகிலுள்ள சந்திரநாகூருக்கு மாற்றப்பட்டிருக்கிறார்.

0 0 0

மாயுர் பாஞ்ச் சமஸ்தான மகாராணி தம்கணவரின் ஞாபகார்த்தமாக அவ்வூர் கைத்தொழிற் கலாசாலைக்கு ஒரு லக்ஷம் ரூபாய் நன்கொடை யளித்திருக்கின்றார்.

0 0 0

முது குளத்தூரில் 3 பெண்கள் முறையே 10, 6, 6 படி உப்பை எடுத்து தெருக்களில் விற்றதாக உப்பளா சப்இன்ஸ் பெக்டர் அந்த பெண்களை கைது செய்திருக்கிறார்.

0 0 0

திருச்சி உடையார் பாளையம் ஜமீனில் ஒரு கிராமத்தார் தீர்வை விஷயமாக ஜமீன்தாருக்கும் தமக்கும் ஏற்பட்ட மாறுபாட்டினால், குடிகள் ஜமீன்தாரின் ரூ. 500 பெறுமான வைக்கோல் போர்களுக்கு தீயிட்டனர்.

0 0 0

வங்காளத்தில் பல ஜில்லாக்களில் வெள்ளமும் பஞ்சமும் ஏற்பட்டிருப்பதை முன்னிட்டு, வங்காள மாகாணகாங்கிரஸ்கமிட்டி எல்லா கட்சியினரையும் சார்ந்த பிரதிநிதிகளடங்கிய கமிட்டி ஒன்றை நியமித்துள்ளது.

0 0 0

காசி "அஜ்" என்ற பத்திரிகையின் ஆசிரியரான திரு. பாபுராவ் விஷ்ணராவ் பாரத்கார் என்பவர் பர்மா நிலைமையையொட்டி வியாச மொன்றைபிரசுரித்ததற்காக அவர்மீது தொடர்ந்த வழக்கில் 124 ஏ. செக்ஷன்படி 1000 ரூபா அபராதம் விதித்து, கொடுக்கத் தவறினால் 6 மாத தண்டனை விதித்திருப்பதாக தீர்ப்பளிக்கப்பட்டது.

0 0 0

திருச்சியை அடுத்த உறையூரில் சுமகாரத்தெரு தங்கவேலின் தாயார் கொலை செய்யப்பட்டு கண்டோன் மெண்டு டிஸ்திரிகட் கோர்ட்டுக் கருகில் செட்டி பாலத்தில் உய்யக்கொண்டான் ஆற்றோரத்தில், கழுத்திலும் இடுப்பிலும் வெட்டி கொலை செய்யப்பட்டு சாக்கில் மூட்டைக்கட்டி எறியப்பட்டிருந்தது. இதற்கு அவளிடம் பணமிருந்ததே காரணமாம்.

0 0 0

சேலம், செவ்வாய்ப் பேட்டை சுயமரியாதைப் பார்க்கில் ஆகஸ்டு 6-ந் தேதி மாலை திரு. ஆர் பால்சாமி அய்யர் தலைமையின் கீழ் ஓர் பொதுக் கூட்டம் கூடிற்று. அக்கூட்டத்திற்கு ஹிந்து, முஸ்லீம் பிரமுகர்கள் பலர் விஜயம் செய்திருந்தனர். மாயவரம் திரு. எஸ். வி. லிங்கம். பட்டுக்கோட்டை திரு. கே. வி. அழகர்சாமி முதலியவர்கள் 'சுயமரியாதையும் காங்கிரசும்' என்பதைப்பற்றி வெகு உருக்கமாக பேசினார்கள்.

0 0 0

சீக்கிய தேசிய வாதிகளை லண்டன் மகாநாட்டில் சேர்க்காததுபற்றி சீக்கியர்கள் கலக்கமடைந்திருக்கின்றனர். இது சம்பந்தமாக சிரோமணி அகாலியர் தளகாரியகமிட்டி கண்டன தீர்மான மொன்றை நிறைவேற்றியுள்ளது. அத்தீர்மானம் "சர்க்காரின் செயல் சீக்கிய சமூகத்தையே அவமதிப்பதாகுமென்றும், சீக்கியர் சங்க பிரதிநிதிகள் கலந்துகொள்ளாத எந்த மகாநாட்டிலும் சீக்கியர்களுக்கு நம்பிக்கை ஏற்படாதென்றும், அத்தகைய மகாநாட்டின் முடிவு அகாலியர் தளத்தை பாதிக்காது" என்பதாகும்.

0 0 0

ரங்கூன் ஜில்லா மாஜிஸ்திரேட் உத்தரவிற்கிணங்க அந்த ஊரிலுள்ள பர்மா சட்டசபை அங்கத்தினரான திரு. சாவின் வீட்டை போலீசார் பரிசோதனை செய்து பர்மா கலகத்தைக் குறித்தும், பர்மா கலகக்காரர்களின் தலைகளை வெட்டி கொலு வைத்திருந்த கொடுமையைக் குறித்தும் அவர் சட்டசபையில் கேட்க உத்தேசித்து எழுதிவைத்திருந்த கேள்விகளடங்கிய காகிதங்களை பறிமுதல் செய்தனர். பின்னர் ஓர் சீனருக்குச் சொந்தமான கார்டியன் அச்சுக்கூடத்தை 4 மணிநேரம் சோதனைச்செய்து போலீசார் வெகு நாளாய் தேடி வந்த சாவின் எழுதிய துண்டு பிரசுரங்களையும் கைபற்றினர்.

மைசூரில் மிகவும் பிரபலஸ்தரான சர் எம். விஸ்வேசுவரையாவின் சகோதரரான திரு. ராமச்சந்திரராவை மைசூர் ஹைகோர்ட்டு நீதிபதியாக நியமித்திருக்கின்றனர்.

0 0 0

பம்பாய் மாகாணத்திலிருந்து சிந்துவைப்பிரிவினை செய்வதை எதிர்த்து இங்கிலாந்தில் பிரசாரம் செய்யும் பொருட்டு சிந்து இந்து மகா கமிட்டியார் 3 பேர்களை இங்கிலாந்துக்கு அனுப்புகின்றனர்.

0 0 0

இந்தியாவில் லேவாதேதி நடப்பதையும், அதிக வட்டிக்குக் கடன் கொடுப்பதையும் நிர்வகிக்க சட்டமொன்று நிறைவேற்ற வேண்டுமென்று சர்க்காரை வற்புறுத்தத் தீர்மான மொன்று கொண்டுவரப்போவதாக இந்திய சட்டசபை அங்கத்தினர் சர். முகமது யாகூப் அறிவித்திருக்கிறார்,

0 0 0

செனத்தோ்எனும் பிரஞ்சுபார்லிமெண்டில் பிரஞ்சு இந்திய பிரதிநிதியா யிருக்கும் திரு. லெமுவாஞ் செடி சபையின் பிரஞ்சு இந்தியாவின் வைத்திய மாணவர்களுக் கனுகூலமாக ஒரு பிரேரணை நிறைவேற்றினர். அதாவது பிரஞ்சு இந்தியாவின் வைத்தியர் எனபட்டம் பெற்றவர்களுக்கு, சகல பிரஞ்சு குடியேற்றநாடுகளிலும் சென்று வைத்தியம் செய்ய உரிமை யளித்தல் என்பதாகும்.

0 0 0

கராச்சியில் நாவிதர்களுக்குள் போட்டியதிகரித்திருக்கிறது. ஸலூன்களில் கிராப் வெட்ட 6 அணாவும், க்ஷவரத்துக்கு 2 அணாவும் வசூலித்து வந்தனர். திடீரென அவர்கள் இவ்விகிதத்தைக் குறைத்து விட்டதால், வெளியில் வேலைசெய்யும் நாவிதர்கள் இதைக் கண்டித்து ஸலூன்களின் முன் மறியல் செய்து வருகிறார்கள். அரை அணாவிற்கு தாங்கள் க்ஷவரம் செய்வதாக கூறி ஸலூன் வாடிக்கைக்காரர்களை வழி மறித்து க்ஷவரம்செய்துவருகிறார்கள். மறியல் போட்டி வலுத்து வருகிறது.





# மூன்றுவது மாகாண சுயமரியாதை மகாநாடு.

## விருதுநகரில் தலைசிறந்த வைபவம்.

### பதினாயிரம் பிரதிநிதிகளும், நூற்றுக்கணக்கான விஸிட்டர்களும் வந்திருந்தனர்.

### காங்கிரசிற்கு நமதியக்கம் பகைமையா?

### திரு. சௌந்தர பாண்டியரின் எச்சரிக்கை.

(நமது நிருபர்.)

மூன்றுவது மாகாண சுயமரியாதை மகாநாடு ஆடிமாதம் 24, 25-ந் தேதிகளில் (ஆகஸ்டு 8, 9 தேதிகளில்) விருதுநகர் சமதரும மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றது. சுமார் 10 ஆயிரம் பிரதிநிதிகளும் எண்ணிறந்த விசிட்டர்களும் பல தலைவர்களும் விஜயம் செய்திருந்தார்கள். காங்கிரஸ் கக்ஷியாரும், ஜஸ்டிஸ் கட்சியாரும், வைதீகர்களும், சிவநேசர்களும் கூட்டத்தில் கலந்திருந்தது குறிப்பிடத்தகுந்ததாகும். கோவை திரு. அய்யாமுத்து அவர்கள் கூட்டத்தில் விஜயம் செய்திருந்ததும் எடுத்துச்சொல்லத் தகுந்ததே.

### தலைவர்கள் வருகை.

6௳ இரவிலிருந்தே ஆயிரக்கணக்கான பிரதிநிதிகள் மாகாணத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்துகொண்டே யிருந்தார்கள். ஈ. வெ. ராமசாமிப் பெரியார், அவர்களது துணைவியார் திருமதி. நாகம்மாள் அவர்கள், திரு. எஸ். ராமநாதன அவர்கள் எம். ஏ. பி. எல்., திருமதி. ரங்கம்மாள் அவர்கள், திருமதி. இந்திராணி பாலசுப்பிரமணியம் அவர்கள். திரு. பாலசுப்பிரமணியம் அவர்கள், முதலியோர் 7௳ 12—45 ரயிலில் வந்து சேர்ந்தனர். பாலசுப்பிரமணியம் தம்பதிகள் ஸ்டேஷனில் மாலை சூட்டப்பெற்று குதூகலமாக வரவேற்கப்பட்டனர்.

சாமி சிதம்பரனார், துணைவியாருடன் 12-45 ரயிலில் வந்து சேர்ந்தார். நீண்ட சுற்றுப் பிரயாணத்துக்குப் பின் திரு. கே. வி. அழகர்சாமி அவர்களும் திரு. எஸ். வி. லிங்கம் அவர்களும் வந்து சேர்ந்தார்கள். பொன்னம்பலம் தம்பதிகள் 6-ந் தேதி இரவு10 மணி சுமாருக்கு வந்துசேர்ந்தார்கள்.

### தலைவர் வரவேற்பு.

7-ந் தேதி மாலை தலைவர்களை வரவேற்கும்பொருட்டு வரவேற்புக் கமிட்டியாரும் நூற்றுக்கணக்கான அபிமானிகளும் தொண்டர்களும் ரயில்வே ஸ்டேஷனை அணுகினார்கள். அங்கு மாயவரத்திலிருந்து வந்த ஸ்பெஷல் ரயிலும், தென்காசி எக்ஸ்பிரஸ் வண்டியும், திருநெல்வேலி பாசஞ்சரும் வந்தன. அவற்றிலிருந்து ஆயிரக்கணக்கான டெலிகெட்டுகள் இறங்கினர். பெருத்தகரகோஷத்தினிடையிலும் ஜேகோஷத்தினிடையிலும் வரவேற்கப் பட்டார்கள். மலர்ந்த முகத்துடன் அன்னார்கள் வரவேற்புக் கமிட்டியாருடன் அளவளாவியது குறிக்கவேண்டிய தாகும். அங்கு தயாராகக் காத்து நின்ற தொண்டர்கள் அவர்களுடைய மூட்டை முடிச்சுகளை வாங்கி ஏற்கனவே சித்தம்செய்யப் பட்டிருந்த மோட்டார் பஸ்ஸுகளிலும் பிளஷர் கார்களிலும் கொண்டு சேர்த்து அவர்களை தனித்தனியான ஜாகைகட்குக் கொண்டு போயினர். சுமார் 5-40க்கு வந்த வண்டியில் தலைவர் திரு. ஆர். கே. ஷண்முகம் வந்து சேர்ந்தார். செவிடுபட ஆகாயத்தில் கிளர்ந்த "ஜே" கோஷத்தினிடையே வரவேற்புக் கமிட்டியாரும் ஈ. வெ. ராமசாமியார் முதலியோரும் வரவேற்று மலர் மாலை சூட்டி அழைத்துக் கொண்டு போனார்கள். அப்போது ஸ்டேஷனிருந்த காட்சி நேரில் பார்க்க வேண்டியதே.

### ஊர்வலம்.

தலைவர் திரு. ஷண்முகம் அவர்கள் ஸ்டேஷனுக்கு வெளியே போனதும் அங்கு போடப்பட்டிருந்த பந்தலில் தயாராயிருந்த ஆறுகுதிரை பூட்டிய அழகிய ரதத்தில் இவர்ந்தார். பல்லாயிரக் கணக்கான மக்கள் ஆங்கு கூடி நின்றார்கள். பல கொடிசாமரங்கள் மிளிர்ந்தன. பாண்டுகோஷித்தது. ஜே கோஷம் கிளர்ந்தது. இரண்டு யானைகள் அலங்காரம் செய்யப்பட்டு நின்றன. உடன் ஊர்வலம் ஆரம்பித்தது. ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்கள் தொகைகுறிப்பிடமுடியாது. பல லக்ஷக்கணக்கானவர் என்று கூறுவதே அமைவுடையதாகும். ஊர் முழுதும் திரண்டு ஊர்வலம் சென்ற ரோட்டில் கூடி நின்றது என்றால் மிகையாகாது. இவ்வூர்வலத்தில் நடந்து செல்ல முடியாது பலர் மோட்டார் வாகனங்களிலேறி ஊர்ந்தனர். போலீஸ்காரர்களும் அதிகாரிகளும் கூட்டத்தில் உதவி செய்தார்கள். இம் மகாநாட்டை உத்தேசித்து, கொண்டுவரப்பட்டிருந்த ரிஸர்வ் போலீசார் ஊர்வலத்தில் தென்பட்டார்கள். இந்தவிடத்தில், மகாநாடு முடியும்வரையிலும் போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவதற்காக பல போலீசார் ஜங்ஷன்கள் தோறும் (சந்திப்பு) நிறுத்தப்பட்டிருந்தார்கள் என்று குறிப்பிடப்படவேண்டும்.

ஊர்வலம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தொடங்கி பஜார் தெருவழியாக சென்று முனிசிப்பல் கட்டிடத்தை அடைந்தது. அத்தெரு முழுதும் பல ஆர்ச்சுகளாலும், தலைவர் ஆர். கே. ஷண்முகத்தின்வரவு நல்வரவாகுக, பெரியார் ராமசாமியார் வரவுநல்வரவாகுக, திருமதி இந்திராணி பாலசுப்பிரமணியம் அவர்கள் வரவு நல் வரவாகுக. திரு. காராணயப் பெருமாள் வரவு நல் வரவாகுக, சுயமரியாதை மகாநாட்டு பிரதிநிதிகள் வரவு நல்வரவாகுக என்று எழுதப்பட்டிருந்த வளைவுகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. காகிதக்கொடிகளும் தெருவில் எங்கும் கட்டி அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. வியாபாரிகளும் குடி ஜனங்களும் தங்கள் வீட்டு முற்றங்களை பெருக்கி சுத்தஞ்செய்து அழகுபடுத்தியிருந்தார்கள். முனிசிபாலிட்டியாரும் நீர் தெளித்து அழகுபடுத்தினர்.

### முனிசிபல் வரவேற்பு.

ஊர்வலம் சுமார் 7 மணிக்கு முனிசிபல் மண்டபத்தை நாடியதும் அங்கு ஓர் உபசாரப்பத்திரம் வழங்கப்பட்டது. அக்கூட்டத்தில் பல முனிசிபல் அங்கத்தினர்களும் பிரதானிகளும் உத்தியோகஸ்தர்களும் விஜயம் செய்திருந்ததோடு ஸப் கலெக்டரும் ஆஜராகியிருந்தார். முனிசிபல் சபை தலைவர் பத்திரம் படித்துக் கொடுத்ததும் திரு. ஆர். கே. அழகாக 15 நிமிஷ நேரம் ஆங்கிலத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்.

அதன் பின்னர் ஊர்வலம் கலைய தலைவர்கள் தம் ஜாகைக்குப்போனார்கள். இரவு சுமார் 4000 பேருக்கு மகாநாட்டு உணவுக்கொட்டகையில் போஜனம் நடந்தது. மகாநாட்டுப் பிரதிநிதிகள் அந்த நாள் இரவு முதல் மறுநாள் பகல் 12 மணி வரையிலும் வந்த ரயில்களிலெல்லாம் வந்து கொண்டேயிருந்தார்கள். எங்கெந்த ஊர்களிலிருந்து யார் யார் வந்தார்கள் என்று சொல்வது ஒரு பாரதமாக முடியும். எனவே சுமார் 10 ஆயிரம் பிரதிநிதிகள் வந்தார்களென்றால் அமையும்.

### பந்தல் (சமதரும மண்டபம்.)

மகாநாட்டுச் கொட்டகை ஊருக்கு கீழ் பாகத்தில் புதிய அருப்புக்கோட்டை ரோட்டுக்கு மேல்புறமமைந்திருக்கும் திரு. செந்தில்குமார் அவர்கள் நிலத்தில் அமைக்கப்பட்டிருந்தது. கொட்டகையில் சுற்றுப்புறங்கள் சமமாக்கப்பட்டு மெல்லிசான சால் போடப்பட்டிருந்தது. அதன் மேல்புறமும் வடபுறமும் புதிதாக இரண்டு ரோடுகள் போடப்பட்டிருந்தன. மேல் புறமுள்ள ரோட்டுக்கு 'பாண்டியன் ரோடு' என்று பெயர் சூட்டப்பட்டிருந்தது. இந்த ரோடு தென்வடலாய் சுமார் ¾மைல் நீளத்தில் ஓடிக்கொண்டிருந்தது. அதன் தென் கடைசியில்தான் சாப்பாட்டுக்கொட்டகை அமைந்திருந்தது. ஓர் அழகிய பூந்தோட்டத்தில் செவ்வையாக அக்கொட்டகை 2000 பேர்களுக்கு ஒரே தடவையில் அன்னமளித்தும் 1000 பேர்களுக்கு உட்கார்ந்திருக்க இடமளித்தும் 100 பேர்களுக்கு குளிக்கத் தகுந்த வசதி கொடுத்தும் உதவியது. வேலையில்லாதபோது ஜனங்கள் அங்கேயே இருந்து வந்தார்கள். அவர்கட்குத் துணையாய் மோட்டார் வாகனங்கள் நினைத்த நேரத்தில் வந்துகொண்டிருந்தன. ஓர் லாரி ஓயாது சுத்தமான குடிக்கும் தண்ணீர் அவசியமான விடங்கட்கு எல்லாம் கொடுத்துக்கொண்டிருந்தது. இந்த பேருதவி பெறும் பொட்டல் மயமான விருதுநகர் பிராந்தியத்தை ஜனவாச யோக்கியமுடையதாக்கிற்று என்றால் மிகையன்று.

நிற்க, மகாநாட்டுக் கொட்டகை மேற்குறிப்பிட்ட செந்தில் குமார் நிலத்தில் அமைந்திருந்தது. அதன் முற்புறம் 4-ஏக்கர் என்று மதிப்பிடக்கூடிய வெளி நிலத்தை நடுவில் ஓங்கி 'நின்ற விடுதலை'க் கொடியும் அதனைச் சூழ்ந்திருந்த செடி கொடிகளும், காகிதத் தோரணங்களும் அழகு செய்தன. அவ் வெளிநிலத்தில் நான் கடைகள், திரு. மலையப்பசாமியின் டிஸ்பென்சரி, ஸலூன், தேநீர்க் கடைகலர்க்கடை, புஸ்தகக்கடைகள் ஆகியன வமைந்திருந்தன. பிரதிநிதிகள் தேவையைக் காத்து நின்றுகொண்டிருந்த மோட்டார்களும் அங்குதான் காணப்பட்டன. இவ்வெளியில் நின்று மேறபுறமாக நோக்கினால் அழகிய பந்தலில் முற்புறம் புலப்படும். பந்தல் ஓர் சிங்கார நாடகக் கொட்டகையை நிகர்த்தது. எண்ணிறந்த தூண்களும் வளைவுகளும பூமுகமும் அழகாய் மிளிர்ந்தன. அதற்குள் பிரதிநிதிகட்கும் தலைவர்கட்கும் பெண்கட்கு மிருக்கத்தகுந்த அமைப்புகளிருந்தன. சுமார் 15 ஆயிரம் பேர் உட்காரத்தகுந்த இடமிருந்தது. தனியான மின்சார மெஷின் பந்தல் முழுதும் விளக்குப்போட்டது. அதுவன்றி பல கியாஸ்லைட்டுகளு மிருந்தன. இத்தகைய பந்தலின் சிறப்பையும் அழகையும் அமைப்பையும் பார்த்து, ஈ. வே. ராமசாமிப் பெரியார் "விருதுநகர்காரர்கள் இனி மேல் மகாநாட்டை வேறு இடங்கட்குப் பிறர் கூப்பிட அஞ்சும்படிச் செய்துவிட்டார்கள்" என்று சொன்னார்.

### பொதுக்கூட்டம்.

ஆகஸ்டு 6-ந் தேதி இரவு 10 மணிக் கெல்லாம் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து குழுமிவிட்டதால் ஓர் பொதுக்கூட்டம் அன்று கூட்டப்பட்டது. அதில் திரு. எஸ். ராமநாதன் தலைமைவகித்தார். திருவாளர்கள் ஈ. வே. ராமசாமியார், புதுச்சேரி சவரிநாதபிள்ளை, கி. கெ. குப்புசாமி, கெ. வி. அழகர்சாமி, அருப்புக்கோட்டை திரு. நல்லையா, ப ஜீவானந்தம், பொன்னம்பலனார், உடுமலை கனகராஜன், முதலியோர் பேசினர். பொதுவாக மகாநாட்டில் எத்தகைய தீர்மானங்கள் நிறைவேற்றப்படவேண்டுமென்றும். காந்தியம் சுயமரியாதைஇயக்கத்திற்கு உடன்பாடா என்றும், ஏன் காங்கிரசை எதிர்க்கின்றார்கள் என்றும் மற்றும் யோசிக்கப்பட்டன. இரவு 2½ மணிக்குக் கூட்டம் முடிவடைந்தது. பலர் பலமாதிரியான சந்தேகங்களைக் கேட்டு விடையறிந்துகொண்டார்கள். 2½ மணிக்குமேல் எல்லோரும் படுக்கைக்குச் சென்றார்கள். கொட்டகையிலேயே தூங்க விரும்பியவர்கட்கு போதிய சாதனங்கள் வழங்கப்பட்டன.

### முதல் நாள் நடவடிக்கைகள்.
### மகாநாடாரம்பம்.

8-ந் தேதி காலை 9 மணிக்கு காலை ஆகாரத்திற்குப் பிறகு மகாநாடு ஆரம்பித்தது. ஆரம்பித்ததும் பெருத்த கரகோஷத்தினிடையே திரு. சௌந்தர பாண்டியனவர்கள் தமது வரவேற்புப் பிரசங்கத்தைப் படித்தார். அது வருமாறு:—

சகோதரப் பிரதிநிதிகளே!

பெரியோர்களே!!

"சுயமரியாதைக் கோட்டை"களில் ஒன்றென பெருமைப்படுத்தப்பட்டு வரும் இவ் விருதுநகரில் கூடியிருக்கும் நமது மூன்றுவது மகாநாட்டிற்கு பிரதிநிதிகளாக பல்வேறுபாகங்களிலுமிருந்து வந்திருக்கும் உங்களை உபசரணைக் கமிட்டியின் சார்பாக வந்தனத்துடன் வரவேற்கிறேன்.

நமது இயக்கத்தின் பெயர் பொது மக்களிடைசென்ற சுமார் ஆறு ஆண்டுகளாகப் பழகிவந்தாலும் நாம் இத்துடன் மூன்று மகாநாடுகள் தான் நடத்தியிருக்கிறோம். இந்த மகாநாட்டுக்குத்தான் இயக்கத்தை விருத்திபண்ணுவதற்கு வேண்டிய பொறுப்பு அதிகம் ஏற்பட்டிருக்கிறது. சென்ற மகாநாடுகள் சுயமரியாதை என்ற பதத்தின் சரித்திரத்தையும், நமது இயக்கத்தின் லட்சியத்தையும், அது வேண்டிய அவசியத்தையும் உணர்த்திவிட்டது. சென்ற சில ஆண்டுகளாக நமது இயக்கத்திற்குப் பலத்தஎதிர்ப்புகள் தோன்றினவென்றாலும், நமதுஎதிரிகள் நம் லட்சியத்தைமறுக்கமுடியாமல் திண்டாடிகொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லாம் தனிப்பட்ட மனிதர்களின் குற்றத்தை எல்லாம் இயக்கத்தின்மீதுதிரித்துக் கூறி இயக்கத்தை நசுக்கப் பிரயத்தனப்பட்டார்கள். உண்மையை வெல்ல யாராலும் முடியாது. சூழ்ச்சி உறுதியாக முறியடிக்கப்படும். நமது இயக்கத்தைப் பஸ்மயாக்குவோம் என்று சபதம் செய்து கங்கணம் கட்டி வெளிவந்த சைவப் பண்டிதர்களுங்கூட சமீபத்தில் நமது கொள்கை முழுமையும் பகிரங்கமாக ஆதரித்துவிட்டார்கள். இவ்வாறு நிதானபுத்தியிலிருந்து குரோதப் பான்மையற்ற கண்களுடன் நோக்கும் யாவருக்கும் நமது கொள்கை உணர்த்தப்பட்டேயிருக்கிறது. பிடிவாதக்காரர்களையும் ஆராய்ச்சிக் குறைவானவர்களையும் ஒருகாலமும் யாராலும் திருப்தி செய்யமுடியாது. எப்படியும் தமிழ்நாட்டிலும் வெளி மாகாணங்களிலும் இருக்கும் அறிவுள்ள மக்கள் யாவரும் நமது லட்சியம் அவசியம் நிறைவேற்றப்படல் வேண்டுமென்று ஒப்புக்கொள்கிறார்கள். அதைச் சந்தேகப்பட்டுக்கொண்டு மறுபடியும் விளக்கமாகப் புனராலோசனை செய்யவேண்டிய அவசியம் இல்லை. சந்தேகம் இல்லாத கொள்கை உடைய நாம் இனி அடுத்தபடியாக நமது கொள்கையைப் பரப்புவதற்கு சாதனங்கள் எவை? நமது இயக்கத்தைப் பலப்படுத்துவது எங்ஙனம்? என்பதையே இம் மகாநாட்டில் நிர்ணயிக்க வேண்டும்.

### காங்கிரசும் நாமும்

சட்ட மறுப்பியக்கத்தின் வேகத்தால் பீடிக்கப்பட்ட நமது அன்பரில் சிலர் கராச்சி காங்கிரஸ் தீர்மானத்தில் நமது கொள்கைகள் எல்லாம் ஒப்புக்கொள்ளப் பட்டு விட்டனவென்றும் ஆகையால் நாம் காங்கிரசுக்கு ஆக்கம் தேடலாம் என்றும் கூறுகின்றனர். கராச்சி காங்கிரஸ் பிரஜா உரிமைத் திட்டத்தில் மத நடுநிலைமையும், சுதேச சமஸ்தானங்களுக்குப் பாதுகாப்பும், மதஸ்தாபனங்களுக்கு விசேஷ பாதுகாப்புகளும் பிரமாதப்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்த ஒரு பகுதியே நமது இயக்கத்தை அறைகூவி போருக்கு அழைப்பது போன்றிருக்கிறதே! அத்துடன் திரு காந்தியாரின் பிரசாரமும், அவர் உபயோகிக்கும் வார்த்

# மூன்ருவது மாகாண சுயமரியாதை மகாநாடு.

## திரு. ஆர். கே. ஷண்முகமவர்களின் தலைமைப் பேருரை.

நாம் செய்ய வேண்டுவதென்ன?

"நமக்கு எதிரியாக மகாத்மா வந்தாலும் எதிர்த்தே தீருவோம்."

தைகளும் அவர் அனுஷ்டிக்கும் முறைகளும் பாமர மக்களிடம், மனிதனின் அறிவைக் கெடுக்கும் மதப் பைத்தியத்தை அதிகப்படுத்தியும் வருகிறது. கராச்சி காங்கிரஸ் தேர்ந்தெடுத்த காரியக்கமிட்டியிலிருந்து விலக்கப்பட்டிருந்த திரு. மாளவியாவும் ராஜகோபாலாச்சாரியாரும் இந்துக்கலைகளையும் இந்து மதஸ்தாபனங்களையும் விருத்தி செய்வதில் தகுந்த டிரஸ்டிகளாவார்கள். தற்கால காங்கிரஸால் வருவதாக இருக்கும் சுயராஜ்யம் ராமராஜ்யமாகத்தான் இருக்கும் என்பதை உணர்ந்த முஸ்லிம்கள் கிளர்ச்சி செய்வதுபோல, காங்கிரஸின் சமுதாய லக்ஷியம் வருணாச்ரம தர்மத்திற்குப் பாதுகாப்பு அளிப்பதாக இருப்பதால் அதன் முயற்சிகளை எதிர்த்துப் போராட வேண்டியது தான். திரு. காந்தியின் வாக்கால், வைதிகப் பிரசாரம் செய்துகொண்டு திரு. ஜவகர்லாலின் பொதுவுடமைப் பிரசங்கத்தால் நம்மை மயக்கப்பார்க்கும் காங்கிரஸ் வலையில் சிக்கிவிட வேண்டாம். ஒரு சிலர் காங்கிரஸ் கடல்போன்ற ஓர் பழமையான ஸ்தாபனம் என்றும், அதில் சகல இயக்கங்களின் கொள்கைகளும் பொதிந்து கிடப்பதால் வேறு தனி இயக்கங்கள் வேண்டுவதில்லை என்றும் வாதிக்கின்றனர். இதுதான் காங்கிரசுக்குப் போட்டியாகத் தோன்றும் வேறு ஸ்தாபனங்களைக் கொலைசெய்யும் நயவஞ்சக மார்க்கம். நமது சமதர்ம இயக்கத்தையும், சில விஷமிகளும், கூலிகளும், நிலையற்ற கொள்கை உடையவர்களும் கராச்சி காங்கிரஸின் பேரால் கொலை செய்ய முயல்கிருர்கள். அவர்கள் சூழ்ச்சி முக்காலும் பலிக்காது. ஏமாறும் வாலிபர்கள் இன்னும் நம் நாட்டில் இல்லை. காங்கிரஸின் தீர்மானங்களும் லக்ஷியங்களும் எவ்வளவு உன்னதமாக இருப்பதாக அந்த மகாத்மா சொன்னலும், அதன் தலைவர்களும் அவர்கள் நடைமுறைகளும் நமது இயக்கத்தைக் கொல்லும் வழியில் பிரயோகமாகி வருகின்றன. ஆகையால் நாம் தற்கால காங்கிரஸ் தலைவர்கள் மீதும் நடத்தைகளின் மீதும் பகிரங்கமாக எதிர்த்துப் போராட வேண்டியது தான். அதற்காக பிற்கால வாலிபர்களே! ஊக்கங்கொண்டு தயாராகுங்கள்.

### நமது வேலை.

உலகம் தோன்றிய காலம் முதல் பல மகான்களால் ஆரம்பிக்கப்பட்டதாகச் சொல்லப்படும் மதக் கோரங்களையும் கட்டுப்பாடுகளையும் உடைத்தெறிய நாம் முயலுகின்ருேம். நம்மிலும் கடுமையான மத ஆதிக்கத்தில் ஆழ்த்தப்பட்டு சமீப காலத்தில் விடுதலை பெற்ற பிறநாடுகள் எம்முறையில் தங்கள் இயக்கங்களை நடத்தின வென்பதைத் தெரிந்து கொண்டோமேயானல், நாமும் ஓர் நூதன திட்டத்தைத் தயாரிக்கலாம். ஆகையால் நம்மில் ஒருவர் இருவரை அன்னிய நாடுகளுக்கு அனுப்பி சமதர்மக் கொள்கைகளைப் பயின்றுவரச் செய்யவேண்டும்.

நமது பந்திய சங்கத்தை ரிஜிஸ்டர் செய்து, பல ஜில்லாக் கிளைகளாகப் பிரித்து, ஜில்லாக் கமிட்டிகளும் நகரக் கமிட்டிகளும் ஏற்படுத்தி நகரக்கமிட்டி ஜில்லாக் கமிட்டிக்கும், ஜில்லாக் கமிட்டி மத்திய சபைக்கும் பொருளாதாரம் உட்பட எல்லா வகைக்கும் ஜவாப்தாரியாக இருக்கும்படி செய்யவேண்டும். சில ஜில்லாக்கள் சேர்ந்த பல சர்க்கிள்களை உண்டாக்கி சர்க்கிள்தோறும் பிரசாரகர் நியமித்துப் பிரசாரஞ் செய்ய வேண்டும். அப்போது நமது இயக்கமும் நாலு பக்கங்களிலும் வளர்ந்துகொண்டே வரும்.

இதற்கேற்ப நமது பிரசாரங்களை வெளிப்படுத்தி பொது ஜனங்களிடையில் பரப்புவதற்காக, கொடைக்கானலில் கூடிய நமது காரியக் கமிட்டியின் தீர்மானப்படி "சண்டமாருதம்" என்ற தினசரிப் பத்திரிகையை ஆரம்பித்துவிட்டோம். அதை வரவேற்று அதன் நிர்வாகத்தில் பங்கெடுத்தும், சந்தாதாரர்களாகச்சேர்ந்தும் ஆதரிப்பீர்களென்று நம்புகிறேன்.

இத்துடன் நமது மற்ருேர் பகுதியான பெண்கள் விடுதலைக் கிளர்ச்சியை நாம் ஆதரித்து அவர்களையும் நம்முடன் சமமாக்கி சம அந்தஸ்து அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நமது பெண்களுக்குச் சொத்துரிமை, விவாக ரத்து, கலப்பு மணம், இளமை மணமறுப்பு, விதவா விவாகம் முதலிய முக்கிய திட்டங்கள் சீக்கிரம் உருவாகி உடனே அமலுக்கு வரவேண்டிய கிளர்ச்சிகளை நாம் செய்யவேண்டும்.

நமது தலைவர் அவர்கள் திரு. ஆர். கே. ஷண்முகம் அவர்கள் நினைத்தால் நமது இயக்கம் அடுத்த நிமிடத்திலேயே ஓர் அகில இந்திய இயக்கமாக விளங்கும். பாஞ்சால ஜாதி ஒழிப்புச் சபையும், பம்பாய் புரோகித மறுப்புச் சங்கமும் நமது கொள்கைகளை ஏற்று நம்முடன் ஒத்துழைக்கத் தயாராக இருக்கின்றன. அவைகளின் கர்த்தாக்களுடன் கலந்தாலோசித்து நமக்கும் அவர்களுக்கும் ஓர் ஐக்கியத்தை உண்டுபண்ண வேண்டுமாய்த் தலைவர் அவர்களை உங்கள் சார்பாகக் கேட்டுக்கொள்கிறேன். எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி இங்கு குழுமியிருக்கும் உங்கள் எல்லோரையும் மறுமுறையும் வரவேற்கிறேன்.

இதன் பிறகு திரு. ஈ. வே. ராமசாமியார் போன்ற பலர் தலைவர் திரு. ஷண்முகம் அவர்களை மகாநாட்டுக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். பின்பு தலைவர் பேசினர்.

### தலைவர் பேருரை

தாய்மார்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

என்னுடைய தேக அசௌக்கியத்தினல் எழுந்து நின்று பேசமுடியவில்லை. அதற்காக மேஜைமீது உட்கார்ந்து பேசும்படிக்கு உத்தரவளிப்பீர்களென்று நம்புகின்றேன் (கரகோஷம்.)

இந்த மகாநாட்டில் தலைமை வகிக்கும் பாக்கியம் கிடைத்ததற்காக மிகவும் மகிழ்கின்றேன். ஆகியில் என்னிடம் தலைமை தாங்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபோது நான், தமிழ்நாடு சுயமரியாதை இயக்கத்தைப் பற்றிய எனது அபிப்பிராயத்தை அறிந்துதானிருக்கிறது, ஆகவே வேறு தலைவர்களைத் தேர்ந்தெடுத்தாலென்ன வென்று ஆலோசனை கூறினேன். என்ருலும் எனது நண்பர்கள் நானே அப்பதவியிலிருக்க வேண்டுமென்று வற்புறுத்தவே அதற்கிசைந்தேன். அவ்வாறு எனக்கோர் சந்தர்ப்பம் கிடைத்ததற்காக எமது நன்றிஉரியதாகின்றது.

இன்று நமது இயக்கத்தின் தத்துவங்கள் பெரிதாக விளக்கப்பட வேண்டுமென்பதில்லை. ஏன் எனில் நமது இயக்கம் தோன்றி ஐந்து ஆறு வருஷங்களாகிவிட்டன. பத்திரிகைகள் பலவும் தினமும் பிரசாரம் செய்து வருவதாலும் எல்லோரும் அறிந்திருக்கிருர்கள். என்ருலும் கடந்த ஒருவருஷமாக நமது இயக்கத்தலைவர்கட்கும் தொண்டர்கட்கும் சில விஷயங்களைப் பற்றி பலமான சந்தேகங்களிருந்து வருவதாகத் தெரிகிறது. இதற்காக நான் பயப்படவில்லை. அத்தகைய அபிப்பிராய பேதத்திற்குக் காரணம் நமதியக்கம் குழந்தைப் பருவத்தை விட்டு வாலிபப் பருவத்தை அடைவதுதான். எந்த வியக்கம் ஒழுங்காக விருக்கின்றதோ அதில் அபிப்பிராயபேதம் வருவது சகஜம். இந்த அபிப்பிராய பேதத்தால் நமதியக்கம் கெட்டு விடுமென்று கூறுவதற்கு ஆதாரமில்லை.

சமீபத்தில் நமதியக்கத்தில் தேசிய சுயமரியாதை சங்கம் என்ற ஒருபிரிவு தோன்றியிருப்பதாகப் பத்திரிகைகளினல் தெரியவருகின்றது. அதற்கு எதிரி சுயமரியாதை இயக்கம் என்றெண்ணப் படுவதாகவும் தெரிகிறது. அபிப்பிராய வித்தியாசம் தலைவர்கட்கும் தொண்டர்கட்கும் இருக்கலாம். அதற்காக மேற்கூறியவாறு போர்தொடுப்பது ஒழுங்காகாது. அதனல் எவ்விதப் பயனுமில்லை. நமது எதிரிகள் நமக்குள் பிளவை யுண்டுபண்ண பல சூழ்ச்சிகளை செய்ய முன்வரலாம். ஆனல் நாம் அதற்கு ஆட்படவோ அவர்கட்கு திருப்பி சூழ்ச்சிசெய்யவோ முயலவேண்டாம்.

தேசியத்திற்கு சுயமரியாதை இயக்கம் பகைமையானதல்ல. சுயமரியாதைக்காரர்களே உண்மைத் தேசிய வாதிகள். வேறு இயக்கங்களில் போலி தேசிய வாதிகளிருக்கலாம். எப்படி என்ருல் தேசியமென்ற பதத்திற்கு விசாலமான அர்த்தத்தை நாம் கொடுத்துப் பார்க்கவேண்டும். விசாலமான அர்த்தம் கொடுக்கும்போது தேசத்துக்கு நன்மை செய்பவன் என்று ஏற்படுகின்றது. வெள்ளையர்களை ஓட்டிவிட்டு நாட்டை எடுத்துக்கொள்ள நினைப்பவன் விசால நோக்கமுடையவனுகமாட்டான். (கேளுங்கள் கேளுங்கள். கரகோஷம்) அந்நியரையும் சொந்தக்காரர்கள்போல் நினைத்து ஆதரிப்பவனை உண்மையில் பரந்த நோக்கமுடையான். அப்படி தேசிய சுயமரியாதைக்காரர்களிருக்கின்ருர்களா வென்பது சந்தேகமான விஷயம். எனவே அவ்வகுப்பு எதிரிகளின் சூழ்ச்சியென்று நினைக்கிறேன்.

நாம் தேசீயக்கட்சியினிடத்தில் எவ்விதமான அபிப்பிராயங் கொண்டிருக்கின்ருேமென்பது ஆராய வேண்டுவதாகும். அப்படி நாம் ஆராய்வதால் பிளவு ஏற்பட்டு விடாது. இப்போது ஏற்பட்டிருக்கும் எந்தத் தேசியக் கட்சியும் நம் கொள்கையை ஏற்றுக் கொண்டிருப்பதில்லை. நமது கக்ஷிக்கு எதிரியாக எவரிருந்தாலும், எந்தப் பெரியாரிருந்தாலும், எந்த மகாத்மாவிருந்தாலும் நாம் எதிர்த்தேதீருவோம். (கரகோஷம். கேளுங்கள் கேளுங்கள்.)

நம்மவர் சிலர் வேறு கட்சிகளிலும் பங்கு கொண்டிருப்பது அநாவசியமாகும்.

சிலர் நீங்கள் என்ன செய்து விட்டீர்கள் என்று கேட்கலாம். நாம் ஒன்றும் செய்துவிடவில்லையென்று வைத்துக்கொண்டாலும், நமக்கு தனிக் கட்சியை வைத்துக் கொண்டு மட்டிலும் ஒன்றும் செய்துவிட முடியாது. நமக்குப் போதிய அளவு வேலை செய்ய சட்டசபைகளும் ஆட்களும் வேண்டும். ஜாதி வேற்றுமை யொழிக்க எப்படி சிறைசெல்ல வேண்டுமென்று நினைக்கின்ருேமோ அதுபோலவே சட்டத் திருத்தங்கள் மூலமாகவும் சட்டசபைகள் மூலமாகவும் போராடவும் மனிதர்கள் இருப்பது முக்கியமாகும். 1858-ம் வருஷம் விக்டோரியா அரசியினுடைய விடுதலையில் எப்

(11-ம் பக்கம் பார்க்க.)





## கண்டனூரில் திருட்டு.

கண்டனூரில் திருட்டு அதிகமாய் நடந்து கொண்டிருக்கின்றதென்றும், அரசாங்கத்தார் அதனை நீக்குவதற்கான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றுமொருவர் எழுதுகிருர்.

## சென்னைச் சட்டசபையில் அறநிலைய பாதுகாப்பு மசோதா.

சென்ற வாரம் நடைபெற்ற சென்னை சட்டசபையில் கோவில், மடங்கள் ஆகியவற்றிலிருந்து வரும் தொகைகளை வசூல் செய்ய வசதிஏற்படுத்தவும், அவற்றை வசூலிக்கு மதிகாரத்தைக் கலக்டர்களுக்கு கொடுப்பதற்குமான திருத்த மசோதா கொண்டுவந்து நிறைவேற்றப்பட்டது.

## இந்திய சட்டசபை 7-ந்தேதி ஆரம்பம்.

இந்திய சட்டசபை 7-ந்தேதி ஆரம்பமாகும். அரசாங்க சம்பந்தமான விஷயங்களை செப்டம்பர் 7, 9, 14, 15, 21, 23, 24 தேதிகளில் ஆலோசிப்பார்கள் எஞ்சிய நாட்கள் ஒத்திவைக்கப்பட்டிருக்கின்றன.

## இராமேசுவரத்தில் மறியல்.

இராமேஸ்வரம் டவுனிலுள்ள மூன்று கள்ளுக்கடைகள், ஒரு சாராயக்கடையாகிய நான்கு கடைகளில் 28-7-31 செவ்வாய்க்கிழமை முதல் 50 வெளியூர் உள்ளூர் தேசியத் தொண்டர்கள் மறியல் நடத்தி வருகிருர்கள்.

## வட்டமேஜை மகாநாட்டுக்கு மகாத்மாவின் பிரயாணம்.

மகாத்மா காந்தி எதிர்பார்த்திருந்த பம்பாய் கவர்னரின் பதில் கிடைத்ததென்றும், தமது புத்திரர் திரு. தேவதாஸ் காந்தி, அந்தரங்கக் காரியதரிசி திரு. மகாதேவ தேசாயி, திருமதி மீராபாய் (மிஸ் ஸ்லேட்) என்னும் நால்வருடன் காளது ஆகஸ்டு மாதம் 15-ந்தேதி கப்பலில் புறப்பட்டுச் செல்வது நிச்சயமாகிவிட்டதென்றும் "ஸ்வராஜ்யா" பத்திரிகை கூறுகிறது.

## புதுக்கோட்டை கலகவிசாரணைக்கு ஐ. ஸி. எஸ்.

புதுக்கோட்டையில் சமீபத்தில் நடந்த கலவரத்தைப்பற்றி விசாரணை செய்வதற்காக நியமிக்கப்பட்டிருக்கும் மிஸ்டர் டி. பி. ரசல் ஐ. ஸி. எஸ். 6-ந்தேதி புதுக்கோட்டை வந்து சேர்ந்தார்.

## லார்டு ரீடிங் திருமணம்.

மாஜி இந்திய வைசிராயான லார்டு ரீடிங் தமது 71-வது வயதில் திருமதி ஸ்டெல்லா சார்னுவை மணந்துகொண்டார். திருமதி சார்னு, லார்டு ரீடிங் வைசிராயாக விருந்த காலத்தில் அவரது காரியாலயத்தில் உத்தியோகம் வகித்து வந்தார். தவிர அரசியல் விஷயங்களிலும் நல்ல ஞானமுண்டாம்.

## திருச்சி ஜில்லா போர்டின் முடிவு.

ஆகஸ்டு 3-ந்தேதி திருச்சி ஜில்லாபோர்டு மீட்டிங் ஹாலில், போர்டு சிக்கனக்கமிட்டியின் இறுதிக்கூட்டம் கூடியது. அதில் சில காரணங்களை முன்னிட்டு சிக்கன சம்பந்தமான முறைகளை தற்போதைக்கு நிறுத்தி வைப்பதென்றும் முடிவாக தீர்மானித்திருக்கிருர்கள். மோட்டார் வரி இனத்தில் ரூ. 1,69,200 க்குப் பதிலாக ரூ. 2,03,000 அரசாங்கத்தார் கொடுப்பதாக தெரிவித்திருக்கிருர்கள். இதனல் வரும்படி ரூ 33,800 அதிகம் கிடைக்கிறது. ஜில்லா போர்டு செலவினங்களில் சில சிக்கனங்கள் செய்ய வேண்டுமென்று ஆபீஸ் குறிப்பு ஒன்று தாயாரித்திருக்கிறது. இந்த இரண்டு இனமும் சேர்ந்து செலவை சமாளிக்கலாம். ஆகையால் தற்போது சிக்கனத்திட்டத்தால் வேலைத் திறமை குறைவதோடு சிப்பந்திகளுக்குக் கஷ்டமும் நேரிடும். இவ்வித காரணத்தை முன்னிட்டு சிக்கன முறையில் யோசிக்கப்பட்ட விஷயங்கள் தற்காலிகமாய்கை விடப்பட்டதென்று தெரிகிறது.

# வட்டமேஜை மகாநாடு

## மெம்பர்கள் ஜாப்பிதா

சில்லா ஆகஸ்டு 4.

மீண்டும் கூடப்போகும் வட்டமேஜை மகாநாட்டுக்கு கீழ்காணும் மெம்பர்களை பிரதம மந்திரி நியமித்திருக்கிருர். அவர்கள் அக்டோபர் மாத முடிவுக்குள் லண்டன்போய் சேரவேண்டும்:—

### பிரிட்டிஷ் பிரதிநிதிகள்.

கனம் ஜே. ராம்சே மெக்டொனல்டு பிரதம மந்திரி, லார்டு சாங்கி, லார்டு சான்கிலர், வெஜ்வுட்பென் இந்தியா மந்திரி, ஆர்தர்ஹெண்டர்சன் அயல்நாட்டு மந்திரி, ஜே. எச். தாமாஸ் குடியேற்ற நாட்டு மந்திரி, பீல் பிரபு, செத்லந்து பிரபு, திரு. இல்வர் ஸ்டான்லி, சர். சாமுவேல்ஹோர், ரீடிங் பிரபு, லூதியான் பிரபு, சர். ராபர்ட் ஹாமில்டன், திரு. ஐசக்புட்.

மற்றும் வாதிக்கப்படும் விஷயத்தை அனுசரித்து மகாநாடு அல்லது கமிட்டிகள் கூட்டத்துக்கு பிரிட்டிஷ் சர்க்கார் மற்றைய மந்திரிகளையும் வரும்படி அழைக்கப்படும்.

### சமஸ்தானப் பிரதிநிதிகள்.

ஆள்வார் மகாராஜா, பரோடா மகாராஜா, போபால் நவாப், பிக்கானீர் மகாராஜா, தால்பூர் மகாராஜா, காஷ்மீர் மகாராஜா, நவநகர் மகாராஜா, பாட்டியாலா மகாராஜா, ரிவா மகாராஜா, சாங்கிலி ராஜா, கொரியா ராஜா, சர். லாராஜா. சர், பிரபாசங்கர், பட்டாணி, சர், மனுபை மேத்தா, சர்தார் சாகிப்ஷடா சுல்தான் அகமத்கான், நவாப் சர். முசமத் அக்பர் ஹைதாரி, சர். மிஸ்ராமுகமத் இஸ்மெயில், திவான்பகதூர் டி. ராகவையா பந்துலுகாரு, கர்னல் கே. என். ஹாக்சார்.

### பிரிட்டிஷ் இந்தியா பிரதிநிதிகள்.

மே. த. அகாகான். நவாப், சர். சாஹிப்ஷாடா, அப்துல் குயாம்கான், சர். சி. பி. ராமசாமி அய்யர், சர். சையத் அலி, இமாம், டாக்டர் பீம்ராவ் அம்பேத்கார், உ. பாபே, ஸ்ரீஜத் சந்திரதார் நரோவா, திரு. ஜே. என். வாசு, திரு. சி. பெந்தால் சர். ஷா நவாஸ்கான், குலாம்முர் தஷா கான்புட்டோ, ராய், பகதூர் குன்வார், விஸ்வேஸ்வர் தயால் சேத், சர். ஹியூபர்ட் கார், திரு. ஒய். சிந்தாமணி, சர். பானக்ஜி தாதாபாய், தர்பங்காமகா ராஜா திராஷா காமேஸ் வரசிங், திரு. ஷாபி தாவுதி, டாக்டர் எஸ். கே. தத்தா, திரு. சி. டி. கிளான் வில்லி, திரு. பஸ்லுல் ஹக், திரு. எம். கே. காந்தி, திரு. எம். எம். கசின், திரு, எ. எச். கஜனுவி சர். குலாம் உசேன் ஹிதயத்துலா, லெப்டினென்ட் கர்னல் சர். ஹென்ரி கிட்னி, சர், பத்மாஜி ஜின்வாலா, திரு. வி. வி. கிரி, கான்பகதூர் ஹாபீஸ் ஹிதயத் உசேன், சர். முகமத் இக்பால், திரு. ஏ. ரெங்கசாமிஅய்யங்கார், திரு. பி. வி. யாதேவ், திரு. எம். ஆர். ஜெயகர் சர். கௌவாஜி ஜஹாங்கிர், (ஜுனியர்) திரு. எம். ஏ. ஜின்னு, திரு. டி. எம். காவின் ஜோன்ஸ், திரு. என். எம். ஜோஷி, பண்டித மதன்மோகன் மாளவியா, கனம் நவாப் ஷாகிப்ஷாடா, சர். சையத் முகமத் பிஹார்ஷா, கனம் சர். புராவஸ், சந்தர் மித்தர் திரு. எச். பி. மோடி, டாக்டர் பி. எஸ். மூஞ்சே, திவான்பகதூர், ஏ. ராமசாமி முதலியார், கனம் காப்டன் நவாப் சர் முகமத் அகமத் சையத்கான், சித்திரை நவாப், சர். முகமத்சாபி, ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, திவான்பகதூர் ராஜா நரேந்திரநாத், டாக்டர் நரேந்திர நாத்லா.

கனம் சையத் முகமத் பாட்ஷா, ராவ்பகதூர் ஏ டி பன்னீர் செல்வம், ராஜா ஸ்ரீ கிருஷ்ண சந்திர கஜபதி நாராயண தேவ், பார்லக்கிமிடி ராஜா, ராவ்பகதூர் சர் ஏ பி பாத்ரோ, திவான் பகதூர் எம் ராமச்சந்திர ராவ், சர்தார் சம்புரன் சிங், சர் தேஜ் பகதூர் சாப்ரு, கனம் வி எஸ் சீனிவாச சாஸ்திரி, சர் சிமன்லால் செத்தல்வாடு, சர் பிரோஜ் சேத்னு, டாக்டர் சாபட் அகமத்கான், ஸ்ரீமதி ஷாநவாஸ், மௌலானு சௌக்கத்தலி, தோம்லி காப்டன் ராஜா சர் முகமத்கான், திரு பி சிவராவ், ராவ்பகதூர் ஆர் ஸ்ரீனிவாசன், ஸ்ரீமதி சுப்பராயன், சர் சையத் சுல்தான் அகமத், திரு ஸ்ரீ பாத் பலவந்த தம்பே, உ அஹ்தீன், சர் புருஷோத்தமதாஸ் தக்கூர் தாஸ், சர்தார் சாகிப் சர்தார் உச்சல் சிங், திரு சி எப் வுட், திரு சாபருல்லாகான், இங்கிலாந்தில் இருக்கும் பிரதிநிதிகளுக்கு பிரதம மந்திரி அழைப்பு கடிதம் அனுப்புவார். இந்தியாவிலிருக்கும் பிரதிநிதிகளுக்கு அவர் சார்பில் வைஸ்ராய் அழைப்புக் கடிதம் அனுப்புவார்.

### சிறுபான்மையோர் சப்கமிட்டி மெம்பர்கள்.

இந்திய வட்டமேஜை மகாநாட்டு சிறுபான்மையோர் சப்கமிட்டிக்கு கீழ்காணும் மெம்பர்களை பிரதம மந்திரி நியமித்திருக்கிருர். கமிட்டி அக்டோபர் மாதம் முற்பகுதியில் வேலை தொடங்க தயாராய் இருப்பதன் பொருட்டு அவர்கள் செப்டம்பர் 26-ந்தேதி லண்டன் போய்ச் சேரவேண்டும்.

திரு ராம்சே மெக்டோனல்ட்டு (தலைவர்) சர் டபுளியூ ஏ ஜோவித், பீல்பிரபு, மேஜர் கனம் ஒஸ்டான்லி, ரீடிங் பிரபு, திரு ஐசக்புட், மே த அகாகான், சர் சையத் அலி இமாம், டாக்டர் பி ஆர் அம்பேத்கார், திரு ஈ சி பெந்தால், சர் ஹியூபெர்ட்கார், சித்திரை நவாப், திரு சி எம் சிந்தாமணி, டாக்டர் எஸ் கே தத்தர், திரு பஸ்லுல் ஹக், திரு எம் கே காந்தி, திரு எ எச் கஜனுவி, லெப்டினெட் கர்னல் சர் ஹென்ரி கிட்னி, கான்பகதூர் ஹாபிஸ் ஹிதாயத் உசேன், சர் முகமத் இக்பால், திரு என் எம் ஜோஷி, பண்டித மதன் மோகன் மாளவியா, சர் புரவெல் சந்தர்மித்தர், டாக்டர் பி எஸ் மூஞ்சே, ஸ்ரீமதி சுப்பராயன், ராஜா நரேந்திரநாத், ராவ்பகதூர் ஏ டி பன்னீர் செல்வம், சர் ஏ பி பாத்ரோ, திவான்பகதூர் எம் ராமசந்திர ராவ். திரு பி சிவராவ், சர் சிமன்லால் செத்தல் வாடு, சர் பிரோஜ்சேத்னு, டாக்டர் சாபட் அகமத்தான், சர் முகமத் சாபி, மௌல்வி முகமத் சாபிதாவுதி, பீகம் ஷாநவாஸ், மௌலானு சௌக்கத்தலி, சர்தார் சம்பூரன்சிங், ராவ்பகதூர் ஆர் சீனிவாசன், கனம் வி எஸ் சீனிவாச சாஸ்திரி, சர்சுல்தான் அகமத், சர்தார் ஷாகிப் சர்தார் உச்சல்சிங், திரு சாபருல்லாகான்.

இங்கிலாந்திலிருக்கும் பிரதிநிதிகளுக்கு பிரதம மந்திரி அழைப்பு அனுப்புவார். இந்தியாவிலிருக்கும் பிரதிநிதிகளுக்கு வைஸ்ராய் அழைப்பு அனுப்புவார்.

## மேனட்டார் கூட்டம்.

லண்டன் மகாநாட்டிற் மைனரிட்டி உபகமிட்டி மெம்பர்கள் செப்டம்பர் மீ 26-ந்தேதிக்குள் லண்டன் போய்ச் சேரவேண்டும். பின்னர் 10 நாட்களுக்குள் மைனரிட்டி கமிட்டி ஆரம்பமாகும்.

## சிசிலி தீவில் எரிமலை.

சிசிலியில் ஆகஸ்டு 3-ந் தேதி இரவு ஏற்பட்ட பூகம்பத்திலிருந்து எட்னு எரிமலை மிகவும் பயங்கரமாக இருக்கிறது. அதனை அடுத்துள்ள பிரதேசங்களிலுள்ளவர்கள் வேறிடத்திற்குச் செல்ல ஏற்பாடு செய்துவருகின்றனர். எரிமலை நெருப்புக்குழம்பைக் கக்குமோ என்ற பயம் ஜனங்களிடை யதிகரித்திருக்கிறது

## சீனவின் முற்போக்கு.

சீனவில் இப்பொழுது ஒரு புதிய விவாக ரத்து சட்டம் அமலுக்கு கொண்டுவரப்பட்டுள்ளது. ஒரு புருஷனே மனைவியோ விவாக ரத்து செய்துகொள்ளவேண்டுமானல் இரண்டு நண்பர்களை அழைத்து, அவர்களது வாக்குமூலத்தை எழுதி அதில் நால்வரும் கையெழுத்திட்டால் அக்காரியம் முடிவு பெற்றதாகும். ஒரு பெண்ணுக்கிருக்கும் சொத்துரிமை இப்புதிய சட்டப்படி விவாகமான பிறகும் உண்டு. பழைய சட்டம் பெண்கள் விஷயத்தில் கொஞ்சம் கடினமாயிருந்ததாம்.

## விளம்பரம்.

### சென்னை ஹைகோர்ட்.

சாதாரண ஒரிஜினல் சிவில்ஜூரிஸ்டிக்ஷன் 1926 ஹூத்திய சி. எஸ். நெ. 762.

இராமசாமி செட்டியார் } வாதி

பி. எம். ஏ. வெள்ளையப்ப } பிரதிவா
செட்டியார், மற்றவர்களும் } திகள்.

1931-ம் ஹூ ஜூலை மீ 16உ யுள்ள கோர்ட்டு உத்திரவுப்படி பி. எம். ஏ. சொத்தின் அடியில் பெயர் குறிப்பிட்டிருக்கும் கடன்காரர்கள் 1931-ம் ஹூ செப்டம்பர் மீ 30உயிலாவது அதற்கு முன்னவது அவரவருக்குள்ள உரிமையை நிரூபிக்க வேண்டும். அவர்கள் அவ்வாறு செய்யத்தவறினல், அவர்களுக்கு குடுபட வேண்டிய பங்குத் தொகையாக ரிசீவர்கள் கையிலிருக்கும் பணம், மேல் உத்திரவுப்படி நடப்பதற்காக கோர்ட்டில் செலுத்தப்படும்.

வங்காளம் தண்டாயுதபாணி
எழுவங்கோட்டைகயிலாச
விநாயகர்
திருவொற்றியூர் நந்திகேசுரர்
திருவொற்றியூர் தீபம்
இராங்கூன் நகரத்தார்
பாசின் கே. ஏ. எல். ஆ. எம்.
வெங்கடாசலபதியையர்
காரைக்குடி எ. கே. என்.
மோல்மீன்ரூன் தண்டாயுத
ஸ்ரீ இராமர் [பாணி
படரோப் தண்டாயுதபாணி
கோட்டையூர்எம். ஏ. எல். வி.
இராயவரம் சிதம்பரம்செட்டி
கோட்டையூர் பி. எம். ஏ.
[உமையாள்
எம். எஸ். என்.
காளி
பி. எம். ஏ. எல். மகன் வள்ளி
யம்மை
கோட்டையூர் ஆர். எம். ஏ. காசி.

பிரேஸர் அண்ட்ராஸ்
ரிஸீவர்சள்.
17, அரண்மனை காரத்தெரு
சென்னை, 1931 ஜூலை 31உ

## அறிவிப்பு.

இதனடியிற் கையொப்ப மிட்டிருக்கும் நான் இராமநாதபுரம் ஜில்லா சிவகெங்கை புதுவயல் க. செ. மு. ராமசாமி செட்டியாருக்கு 1929-ம் வருஷம் மே மாசம் 18-ந் தேதி கொடுத்த அட்டோர்னித் தத்துவப் பவரை ரத்துச்செய்யப்பட்டிருக்கிறதென்பதை இத்தால் தெரிவித்துக் கொள்கிறேன்.

ந. செ. முத்தையா
செட்டியார்,
ககேன்னை,
4—8—31 சிலோன்.

## பர்மா கலகம்.

### தாராவாடி கலகத் தலைவர் சாயாசேன் பிடிபட்டார்.

பர்மா கலகத்தை யடக்குவதற்காக நியமிக்கப்பட்டிருக்கும் பட்டாள மொன்று மாத்தனைக்கும், ஷான்சமஸ்தானத்திற்குமிடையிலுள்ளகாடுகளில்நான்குநாள்விடாமல் தேடியதால் மியானு வென்ற ஒரு பொங்கி கைது செய்யப்பட்டான். இவனே சாயாசேன் என்று ஒப்புக்கொள்ளுகின்றன்.



குமரன்

காரைக்குடி

பிரஜோற்பத்தி ஞு ஆடிமீ உகூ உ

## விருதுநகர் மகாநாடு.

மூன்றுவது சுயமரியாதை மகாநாடு ஆகஸ்டு 8,9 தேதிகளில் விருதுநகர் சமதரும மண்டபத்தில் மிகவும் சிறப்பாக நடைபெற்றிருக்கின்றது. இம் மகாநாடு சுயமரியாதை இயக்கத்தின் சரித்திரத்தில் ஓர் முக்கியமான அத்தியாயமாகப் பொறிக்கப்படத் தருந்ததாகும். அதில் மகாநாட்டுத் தலைவர் திரு. ஆர். கே. ஷண்முகம் அவர்கள் கூறியது போல, "நமதியக்கம் குழந்தைப் பருவத்தை விட்டு வாலிப வயதை அடைந்து கொண்டிருக்கும் காரணத்தைக் கொண்டு ஏற்பட்டதாகிய பல சந்தேகங்களும்" நமதியக்கத்திற்கும் காங்கிரஸிற்கு மெத்தகைய சம்பந்தமுண்டென்பதும் தெள்ளத்தெளியவிளக்கப்பட்டுவிட்டன அதோடு திரு.எஸ்.கே. நாயர் போன்ற அறிஞர்களுக்கும் நமதியக்கம் எவ்வளவு இன்றியமையாத தென்பதையும் காண்பித்துவிட்டது. மாகாணத்தில் பல பாகங்களிலிருந்தும் பலப்பல சந்தேகங்களோடு வந்திருந்த ஆயிரக்கணக்கான பிரதிநிதிகளும் விசிட்டர்களும் தம் சந்தேகங்கள் தெளிந்து 'ஜே'கோஷத்தாலும் "கேளுங்கள் கேளுங்கள்" என்ற சந்தோஷப் பெருக்காலும் மகிழ்ந்தார்ப்பரித்தது விஷேமாக குறிப்பிடத்தருந்ததாகும். மகாநாடு ஆரம்பமுதல் முடிவுவரை அமைதியுடனும் ஊக்கத்துடனும் உணர்ச்சியுடனும் நிகழ்ந்து வெற்றி பெற்றதும் பேத புத்தியோடு வந்த சிலரை வாய்திறவாமலாக்கியதும் பார்த்தால் இவ்வியக்க தத்துவங்கள் பொதுஜனங்களின் மனதில் எவ்வளவு ஆழ்ந்து பதிந்துவிட்டதென்பது நன்கு புலனாகும்.

இம் மகாநாட்டில் சுயமரியாதை சங்கத்தை ரிஜிஸ்தர் செய்ய வேண்டுமென்றும் ஜில்லாக்கள்தோறும், தாலுகாக்கள் தோறும், கிராமங்கள் தோறும் கிளை சங்கங்கள் நிறுவ வேண்டுமென்றும்பிரசினைகிளப்பப்பட்டுநிறைவெற்றப் பட்டிருக்கின்றது. தலைவர்கள் இன்னும் இரண்டு மாதங்களுக்குள் ரிஜிஸ்டர் செய்துவிடப் படுமென்று உறுதி கூறினர்கள். இவ்வுறுதிமொழிமெய்ப்பிக்கப்பட்டு, இளைஞர் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தைப் போல, ஆங்கிலத்தில் ஓர்பத்திரிகையும் நடத்தத் தொடங்கிவிட்டோமெனறால்அன்றைக்கேநமதியக்கம் ஊற்றெடுத்து வடநாட்டிற்கும் பாயத்தொடங்கிவிடுமென்பதற்குசந்தேகமில்லை. நமதியக்கத்தில் மலிந்து கிடக்கின்ற உண்மைகளைக் கண்டால் தீவிரப் போக்குடைய வடநாடுபொன்னெழுத்துக்களால் அவைகளை எழுதிப் போற்றுமென்றும் அதிசீக்கிரத்தில் நமதியக்கம் ஓர் அகில இந்திய இயக்கமாக மாறி முதலாவது சுயமரியாதைக் காங்கிரஸைக் நடத்துமென்றும் உண்மையாகவே நாம் கூறுகின்றோம். ஈரோடு மகாநாட்டில் திரு. எம். ஆர். ஜாயகர் முழங்கியவண்ணமும், இம்மகாநாட்டில்—விருதுநகரில்— திரு. எஸ். கே. நாயர், திரு. ஆர். கே. ஷண்முகமாகியோர் மொழிந்தவண்ணமும் நமதியக்கமே எக்காலமும் பொதுமக்களின் வெற்றிபெற்ற வியக்கமாகவிருக்கும். இந்தியா எத்த கையலட்சியத்தை நிறைவேற்றிய போதிலும் நமதியக்கத்தின் தேவையை என்றும் மறந்துவிட முடியாது. ஏனென்றால் நமதியக்கம் அவ்வளவு பரந்த அரும் பெரும் கொள்கைகளை புனைந்திலங்குகின்றது.

விருதுநகர் மகாநாடு பலர் எதிர்பார்த்ததற்கு மாருக மதங்கள் ஒழிய வேண்டுமென்ற தீர்மானத்தையும், வர்ணாசிரம கண்டனத்தீர்மானங்களையும் நிறைவேற்றிவிட்டது. மதத்தில் கைவைத்தால் பொதுமக்கள் என்ன நினைப்பார்களோ என்றெண்ணி மயங்கியசிலருக்குபலவிளைஞர்கள்மதத்தை ஒழிக்கவே இங்கு கூடியிருக்கின்றோமென்று ஆர்ப்பரித்தது மிகவும் வியப்பைக் கொடுத்திருக்கலாம். இது நமதியக்க வளர்ச்சிக்கும் பொதுமக்களிடமுண்டுபண்ணியிருக்குமுணர்ச்சிக்கும் ஓர் அறிகுறியாம்.

இன்னும்நமதியக்கம் எந்த அளவுக்குவளுவடைந்து பரந்து வருகின்றதென்பதற்கு மூன்றுவதாக நிறைவேற்றப்பட்டிருக்கும் தீர்மானமே ஓர் திருஷ்டாந்தமாகும். அத்தீர்மானம் வர்ண பேத (நிற பேத)த்தை ஒழிக்கும் பொருட்டு மங்கோலியர், கக்கேஷியர், சிவப்பிந்தியர், நீக்கிரோவர் என்கின்ற பல நிற மக்களோடும் கலப்பு மணங்கள் புரியவேண்டுமென்றும் அம்மணங்களுக்குச் சாதகமாயிருக்கும்பொருட்டு பல பாஷைகளை கற்க வேண்டுமென்றும் சொல்கின்றது. இதனை சிறிது ஆராய்ந்து பார்த்தால் நமதியக்கம் போய்க்கொண்டிருக்கும் முன்னேற்றத்தின் வேகம் புலனாகும். இதனை, தலைவர் கூறியவாறு "வெள்ளையரை ஓட்டிவிட்டு நாட்டை கைப்பற்றவேண்டுமென்று நினைக்கின்ற சில அரசியல் வாதிகளுடைய நோக்கத்தோடு ஒப்பிட்டுப்பார்த்தால், எந்த வியக்கம் பரந்த நோக்கமுடையதென்பதும் விருதுநகர் மகாநாடு முந்திய இரண்டு மகாநாடுகளைவிட எவ்வளவு முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றி யிருக்கின்றதென்பதும் விளங்கா நிற்கும்.

இவ்வளவு பெருமைபாக நடை பெற்ற நம் மகாநாட்டைக் கண்டால் இரண்டு மாதங்கட்கு முன்னேயே விருதுநகர் மகாநாட்டில் ஏதோ பெரும் பெரும் பூதங்கள் கிளம்பப்போகின்றனவென்று பொய்க்கதைகளை கட்டிவிட்டு பொதுஜனங்களை ஏமாற்றப்பார்த்த பித்தர்கள் என்செய்வார்களோ? அன்னர் சுயமரியாதை இயக்கம் உண்மை நிரம்பிய மக்களியக்க மென்பதையும், உண்மையை ஒருநாளும் அழித்துவிட முடியாதென்பதையும், அழிக்க முயல்பவன் தனக்கே படுகுழியை வெட்டிக்கொண்டவனுவா னென்பதையும் தெரிந்திருக்கவேண்டுமென்று எச்சரிக்கிறோம்.

### உள்ளூர்ச் செய்தி.

ரெங்கூன் உண்டியல்

| | | |
|---|---|---|
| | வட்டம் | 1—0—0 |
| சென்னை | ,, ,, | 0—3—0 |
| பவுன் விலை | | 13—10—6 |
| வெள்ளிக்கட்டி 100 | | 44—[illegible]—0 |

புதிய மெம்பர் நியமனம்:- காரைக்குடி பெஞ்சு கோர்ட்டில் மகா-ா-ஸ்ரீ S. M. A. R. நாராயணன் செட்டியாரவர்கள் ஸ்தானத்தில், திரு. சு. பா சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் சென்னை கவர்ன்மெண்டாரால் ஆனரரி பெஞ்சு மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஆஸ்பத்திரி சிகிச்சை:—இவ்வூர் சுப்பிரமணியன் தருமாஸ்பத்திரியில் ஜூலை மாதத்தில் சிகிச்சிக்கப்பட்ட நோயாளிகள்மொத்தம்3835பேர் என்றும், அவரில் மகமதியர்கள் 125 என்றும், கிருஸ்தவர்கள் 31 என்றும் டாக்டர் கோவிந்தராஜுலு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜனரல் விஜயம்.— போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜனரல் மிஸ்டர் கன்னிங்காம் அவர்கள் செவ்வாய்க்கிழமை இங்கு விஜயம் செய்தார். திவான்பகதூர் ஆவி. பழ: சிதம்பரம் செட்டியாரும், திரு பெரியணன் செட்டியாரும் அன்று ஆங்கில பாடசாலையில் ஓர் தேநீர் விருந்தளித்தார்கள். உள்ளூர் பிரமுகர்கள் பலர் விஜயம் செய்திருந்தனர்.

கொக்கிப்புழு வியாதி பரிகாரம்:— செவ்வாய்க்கிழமை கவர்ன் மெண்டு கொக்கிப்புழு நிபுணர் ஒருவர் இங்கு விஜயம் செய்து இரவு ஸ்தலம் ஆங்கி பாடசாலையில் கொக்கிப்புழுவின் அமைப்பு, ஜீவிதம், அதனல் ஏற்படும் நோய், அது பரவும் விதம், தடைசெய்யும் மார்க்கம் முதலிய வற்றைப்பற்றி மாஜிக் லாண்டர்ன்உதவியால் ஓர் பிரசங்கம் செய்தார். அதன் பிறகு ஸ்கூல் மாணவர்கட்கு கொக்கிப் புழுவைக் போக்குவதற்கான மருந்தைக் கொடுத்தார். புதன்கிழமை மாணவர்கட்கு ரஜா கொடுக்கப்பட்டது.

காலநிலை:— சென்ற வாரங்களைப் போல் இந்த வாரமும் நல்ல மழை பெய்தது. இன்னும் பெய்யுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது.

### காரைக்குடி ஜில்லா அரசியல் மகாநாடு.

காரைக்குடி ஜில்லா அரசியல் மகாநாடு ஆகஸ்டு 29,30 தேதிகளில் நடைபெறுமென்றும், ஆந்திர தேசபக்த வீரமணிகளில் ஒருவராகிய புலுசு சாம்பமூர்த்தி கொடி யேற்றுவிழா வாற்றுவா ரென்றும், நாகர்கோவில் டாக்டர் எம். பெருமாள் நாயுடு அவர்கள் தலைமை தாங்குவா ரென்றும், அம் மகாநாட்டோடு பெண்கள் மகாநாடு, இளைஞர் மகாநாடு, விவசாயிகள் மகாநாடு முதலியனவும் நடைபெறுமென்றும், பெண்கள் மகாநாட்டுக்கு தேசத்தின் பொருட்டு சிறைசென்ற பெண்மணி திருமிகு. ருக்மணி லட்சுமிபதி அம்மாள் தலைமை தாங்குவா ரென்றும், இளைஞர் மகாநாட்டில் கோயம்புத்தூர் திரு. ஸி. பி. சுப்பையா அவர்கள் அக்கிராசனம் வகிப்பா ரென்றும், தஞ்சாவூர் ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி திரு. வேதரத்னம் பிள்ளை விவசாயிகள் மகாநாட்டில் தலைமை ஏற்று நடத்துவா ரென்றும் மகாநாட்டுக்கு வரவேற்பு மெம்பர்கள் கட்டணம் ரூ. 5 என்றும் பிரதிநிதிகள் கட்டணம் ரூ. 1 என்றும் விசிட்டர்கள் கட்டணம் ரூ ½ என்றும் பொதுக்காரியதரிசி திரு. பொ. திருகூடசுந்தரம் எழுதுகிறார்.

### காங்கிரஸ் கொடி.

தற்கால காங்கிரஸ் கொடியிலுள்ள மூன்று நிறங்களில் சிவப்பு ஹிந்துக்களையும், பச்சை முஸ்லீம்களையும் வெள்ளை ஏனைய சமூகங்களையும் குறிப்பதாக இந்தியர்கள் மனதில் ஒரு உணர்ச்சி இருந்துவருவதினல் தமக்கும் ஒரு நிறம் வகுக்கவேண்டுமென சீக்கியர்கள் பிடிவாதம் செய்தார்கள். சீக்கியர்கள் வீரர்கள் அல்லவா? அவர்கள் அபிப்பிராயத்தை யாருக்காவது மீற முடியுமா? மீறினல் சுடச்சுட புத்திபுகட்டிவிடமாட்டார்களா? எனவே அவர்கள் கோரிக்கைக்கு காங்கிரஸ்காரர் செவிசாய்க்கவேண்டியதாயிற்று. ஆகவே காங்கிரஸ் கொடித்தகராறை விசாரித்து நிர்ணயம் செய்யும்பொருட்டு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியார் ஒரு சப் கமிட்டியை நியமித்தார்கள். அந்தக் கமிட்டியார்கொடிவிஷயமாககாங்கிரஸ்கமிட்டி அபிப்பிராயங்களையும் மற்றும் பிரபலஸ்தர்கள் அபிப்பிராயங்களையும் அறிந்தபிறகு எல்லாருக்கும் திருப்தியுண்டாகுமாறு காங்கிரஸ் கொடி மஞ்சள் நிறத்திலிருக்கவேண்டுமென்றும் அதில் சர்க்காவின் உருவம் நீல நிறத்தில் பொறிக்கப்படவேண்டுமென்றும் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். அந்த முடிவை காங்கிரஸ் காரியக் கமிட்டியார் அநேகமாக ஏற்றுக்கொள்வார்கள் என்றே தெரிகிறது. ஆனல் இந்த காங்கிரஸ் கொடிப் பிரச்சினை காங்கிரஸ்காரரால் மட்டுமே முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இதர கட்சியார் அபிப்பிராயங்களை கொடிக் கமிட்டியார் அறிய முயலவில்லை. ஆகவே காங்கிரஸ்காரரால் மட்டும் வகுக்கப்பட்டிருக்கும் கொடி காங்கிரஸ் கொடியேயன்றி தேசியக்கொடியாக மாட்டாதென்றும் தேசியக் கொடி எல்லாக் கட்சியார் ஆதரவும் பெற வேண்டுமென்றும் திராவிடன் எழுதுகிறது. "தமிழ்நாடு" திராவிடனை விட ஒரு படி மேலே போயிருக்கிறது. காங்கிரஸ் கொடியில் ராட்டினத்தை அமைப்பதை தமிழ்நாடு ஆதரிக்கவில்லை. இந்தியாவில் ஜீவாதாரமான தொழில் பயிர்த் தொழிலாகையால் ஏரின் உருவம் அமைப்பதே பொருந்துமென "தமிழ்நாடு" கூறுகிறது. அதுசாத்தியமில்லையானல் வானகத்து உருவங்கள் பொறிக்கப்பட வேண்டு மென்றும் கூறுகிறது. காங்கிரஸ் தீர்மானிக்கும் கொடி நிரந்தரக் கொடியாகா தென்றும், நிரந்தரமான கொடி அமைப்பதற்கு முன் சுதேச மன்னர்கள் அபிப்பிராயமும் அறிய வேண்டுமென்றும் சர்வகட்சி மகாநாடு அல்லது புதிதாக அமையப் போகும் இந்தியபிடால் மகாசபையே கொடி விஷயத்தைத் தீர்க்கவில்லை யென்றும் "தமிழ்நாடு மேலும்" கூறுகிறது. இவ்வாறு பத்திரிகைகள் பலவும் தேசிய வாதிகள் பலரும் எழுதிக்கொண்டும் சொல்லிக்கொண்டு மிருக்க ஒருசாரார் புதிய கொடியையே அங்கீகரித்து வணக்கம் நடத்தி வருகின்றார்கள். சென்றவாரம் சர்தார் பட்டேல் பம்பாயில் புதியகொடியை ஏற்றினரென்று தெரிகிறது. இத்தகைய மாறுபட்ட அபிப்பிராயங்களின் பொருளென்ன?

### புதுவயல், தனலெட்சுமி விலாஸ் பந்தடிமால்.

ஷை பந்தடிமாலின் சார்பாக இருவர்கள் சேர்ந்து பந்து விளையாடி பரிசு பெறும் விளையாட்டு ஆவணி-மீ ௳ ஆரம்பிக்கப்படும். டபிள்ஸ் டோர்ணமெண்டில் சேரவிரும்புகிற ஒவ்வொரு ஜதையும் பிரவேச கட்டணம் ரூ (க) ஒன்றுடன் ௬-உக்குள் அனுப்பவேண்டும். பாலட்குலுக்கி நிகழ்ச்சி யனுப்பப்படும். முடிவாக ஜயிப்பவர்களுக்கு சிறிய தங்கப்பதக்கமும் தோல்வியுறுபவர்களுக்கு வெள்ளிப் பதக்கமும் பரிசாக அளிக்கப்படும்.

(குறிப்பு) ஷை டோர்ண மெண்டில் பதினெட்டு வயதுக்குட்பட்ட தனவைசியர்கள் மட்டும் விளையாடலாம். என்று காரியதரிசி திரு. மெ. வீரப்பசெட்டியார் எழுதுகிறார்.



## மகாத்மா ஆகஸ்டு 15-ல் புறப்படுவார்.

மகாத்மா காந்தி ஆகஸ்டு 15-ந் தேதி திருவாளர்கள் தேவதாஸ் காந்தி, பியாரிலால், மகாதேவதேசாய், ஸ்ரீமதி மீராபாய் ஆகியவர்களோடு புறப்படுவார். மகாத்மா 3 வது வகுப்பில் பிரயாணம் செய்வாரென்பது சரியல்ல. அவருக்காக ஓர் தனியறை ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றது என்று பம்பாய் கிராணிக்கல் எழுதுகிறது.

### கப்பற்செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து சிங்கப்பூர் முதலான விடங்கட்கு பிரயாணமாகும் விவரம்:—

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| ராஜுலா | 23—8—31 |
| ரோணு | 6—9—31 |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணம் வந்துசேரும் விபரம் வருமாறு:—

| கப்பல் | வருந்தேதி |
|---|---|
| ராஜுலா | 13—8—31 |
| ரோணு | 27—8—31 |

### மதுரை நகரசபை. கலைக்கப்பட்டது.

மதுரை முனிசிபாலிட்டியை கலைக்கும்படி சர்க்கார் உத்தரவுபிறப்பித்துவிட்டதாகத் தெரிகிறது. உத்தரவில் ஒருவருஷம் வரை அதாவது ஆகஸ்டு 14-ந் தேதி முதல் ஒரு வருஷம்வரை அது விசேஷ ஆபீசர் அதிகாரத்திற்குள்ளிருக்கும். டெப்யூடிகலெக்டர் ராவ்சாகிப் வி. பொன்னுசாமிபிள்ளை ஸ்பெஷல் ஆபீசாக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவருக்கு எல்லா அதிகாரமும் கொடுக்கப்பட்டி ருக்கிறது. அவர் அங்கத்தினர்கள் தலைவர் முதலியவர்கள் செய்துவந்த வேலைகளை எல்லாம் கவனிக்க வேண்டும். நகரசபை தனது வேலையைச் செய்வதற்கு கொஞ்சமும் தகுதியுடைய தல்லவென்பதே சர்க்கார்கருத்தாகும்.

### ராமநாதபுரத்தில் காலரா.

ராமநாதபுரம், தனுஷ்கோடி, இராமேஸ்வரம், திருப்புல்லாணி, தேவிபட்டணம், முதலிய யாத்திரை ஸ்தலங்களில் காலரா முதலிய தொத்து வியாதிகள் நடமாட்டத்தால் உயிர் சேதம் அதிகமாயிருந்து கொண்டிருப்பதால் மேற்படி இடங்களுக்கு இந்த ஆடி, ஆவணி மாதங்களில் நடக்கும் ராமேஸ்வரம் ஆடி உற்சவத்துக்கும். அமாவாசை முதலிய பருவகாலத்துக்கும் யாத்திரையாகப் போக உத்தேசிக்கும் பிரயாணிகளை ஷை இடங்களுக்கு வராமலிருக்கும்படிக்கும் அப்படிவரும் பக்ஷத்தில் தொத்துவியாதிகளின் கஷ்டத்துக் குள்வாக வேண்டி யிருக்கும் என்றும் எச்சரிக்கப் பட்டிருக்கிறது என்று ராமநாதபுரம் காலுகா தாசில்தார் எழுதுகிறார்.

### லெக்ஷிமிபுரம்.

ஸ்ரீ மீனுக்ஷி சங்கத்தின் 6-வது ஆண்டு நான்காம் மாதக்கூட்டம் நாளிது பிரஜோற்பதி ஆண்டுஆடித் திங்கள் 26-ம் நாள் திங்கட்கிழமை மாலை 4 மணிக்கு சொக்கலிங்க வித்தியாசாலை தலைமை ஆசிரியர் திரு. ரெங்கசாமி அய்யங்கார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சொ. வி. மாணவர் சா. வீரப்பன் "திலகரும் தேசத்தொண்டும்" என்பது பற்றியும், சித. சொக்கலிங்கம் "அகங்காரமுள்ள அரசன்" என்பது பற்றியும், வெ. அருணசலம் "பேராசை பெருந்துன்பம்" என்பது பற்றியும், மாணவிகளாகிய பெ. செல்லம்மை "சகோதரர் வாஞ்சை" என்பது பற்றியும், சி. மருதாயி "தாடியை இழந்த மடையன்" என்பது பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள்.

### ஓரியெண்டல் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி.

இக் கம்பெனியின் பங்குக்காரர்கள் பாலிஸி ஹோல்டர்களுடைய விசேஷப் பொதுக் கூட்டம் பம்பாயில் ஜூலை 8-ந் தேதி மிஸ்டர் எஸ். இ. வார்டன் தலைமையில் நடந்தது. அவர் தமது பிரசங்கத்தில் கூறியதாவது:- சென்ற வருஷம் டிசம்பர் 31-ந் தேதி இருந்தபடி கம்பெனியின் ஐவேஜி வருமானங்களைக் கணக்கிட்டு கன்ஸல்டிங் ஆக்சுவரி அனுப்பி யிருக்கும் யாதாஸ்தைப்பற்றிக் சந்தோஷத்துடன் பேச விரும்புகிறேன். இந்த யாதாஸ்தில் கண்ட 3 வருஷங்களுள் இரண்டு வருஷத்தில் மிகவும் நல்ல முன்னேற்ற மேற்பட்டது. கடைசி வருஷத்தில் பொருளாதார ராஜீய நிலைமைகளில் முன்னேற்றம் தடைப்பட்டுவிட்டது. ஆயினும் முந்திய மூன்று வருஷங்களில் ஏற்பட்ட அபிவிர்த்தி இந்தக்காலத்தில் குறையாமலிருந்து வருவது மிகுந்த சந்தோஷமளிக்கின்றது. 84867 பாலிஸிகள் புதிதாக $17\frac{3}{4}$ கோடி ரூபாய்க்கு வெளியிடப்பட்டன. ப்ரீமியம் வருமானம் மாத்திரம் சுமார் 430 லக்ஷம் ரூபாய் கிடைத்திருக்கிறது. இது முந்திய மூன்று வருஷத்தைவிட 50% அதிகமாகும். மரண விகிதங்கள் மிகவும் குறைவாக விருந்து நமக்கு அதிக அனுகூலத்தை யளித்து வருகின்றன. நமது செக்யூரட்டிகளின் மதிப்பு இடையில் சற்று மாறிய போதிலும் வட்டி வருமானம் பாதிக்கப்படவில்லை. ஆனல் மூன்று வருஷ முடிவில் இடையிலேற்பட்ட மதிப்புக் குறைவை ஈடு செய்யக் கொஞ்சம் தொகை ஒதுக்க வேண்டியிருக்கிறது. போனஸ் விகிதத்தை இப்போதைய நிலைமையில் பாதுகாத்து வருவதற்காக கன்ஸல்டிங் ஆக்சுவரி வட்டி வருமானத்தைக் கணக்கெடுக்கையில் 12 முதல் $13\frac{3}{4}$ வரையில் விட்டு விட்டு $3\frac{3}{4}$ வீதம் சேர்த்துக்கொண்டிருக்கிறார். செக்யூரிட்டிகளைப் பாதுகாப்பதுடன் தாற்காலீகக் கஷ்டங்களால் பாலிஸி ஹோல்டர்களுக்குப் பாதகமேற்பட்டுவிடாமலிருந்ததற்காக டைரெக்டர்கள் இந்த முறையை அங்கீகரித்திருக்கின்றனர். சென்ற 3 வருஷங்களில் 1, 6, 23, 543. ரூபாய் லாபம் கிடைத்திருக்கிறது. அதாவது லாபம் 50% அதிகரித்திருக்கிறது. ப்ரீமியம் வருமானம் 24% அதிகரித்திருக்கிறது. பங்குக்காரர்களுக்கு பங்கு ஒன்றுக்கு 100 ரூபாய் வீதம் போனஸ் அதிகரித்து, 50 ரூபாயை ரொக்கமாகக்கொடுத்துவிட்டுப் பாக்கி 50 ரூபாய் பங்குகளைப் பூரணமாக 200 ரூபாய் வீதம் செலுத்தியதாகச் செய்ய மூலதனத்தில் சேர்த்துவிட உத்தேசிக்கப்படுகிறது. சென்ற 3 வருஷங்களுக்கும் பங்குக்கு 75 ரூ. லாபம் வீதம் பிரித்துக் கொடுக்குமாறு சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. முன்பு 50 ரூ. வீதமே கொடுக்கப்பட்டது. இவற்றால் நமது பங்குகளின் மதிப்பு மிகவும் அதிகரிக்கும். ஆயுள் முழுவதுமுள்ள பாலிஸிகளுக்கு 1000 ரூபாய்க்கு 25 ரூ. வீதமும் எண்டோமெண்டு பாலிஸிகளுக்கு 1000 ரூபாய்க்கு 20 ரூபாய் வீதமும் போனஸ் கொடுக்குமாறு ஆக்சுவரி சிபார்சு செய்திருக்கிறார். 1931 டிசம்பர் 31-ந் தேதி அமலிலிருந்த பாலிசிகளுக்கு இந்த போனசைக் கொடுக்க 1,00,05,328 ரூபாய் பிடிக்கும். இது முந்தின சபையைவிட 53 அதிகமாகும். பாலிஸிகளில் தொகை மிகவும் அதிகரித்திருப்பதே இதற்குக் காரணம். போனஸ் கொடுத்தபின் 95,415 ரூபாய் பாக்கியிருக்கிறது. பென்ஷன் நிதிக்கு 1,00,000 ரூபாய் ஒதுக்குமாறு சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

### கைலாசம் சென்ற மைசூர் மகாராஜா.

உலகத்தில் புண்ணிய ஸ்தலமெனச் சொல்லப்படும் கைலாச பருவதக் கோவிலுக்கு மைசூர் மகாராஜா யாத்திரை சென்றதைக் குறித்து மைசூர் செய்தியொன்று விளக்கிக் கூறுகிறது. கைலாச பருவதத்தை ஹிந்துக்களும், பௌத்தர்களும் புனிதமாகக் கொண்டாடுகிறார்கள். யாத்ரீகர் அங்கு செல்லும்போது அடைந்த கஷ்டங்களைக் குறித்து அச்செய்தி கூறுவதாவது:— கைலாச பருவதத்துக்குச் செல்லுவது மிகவும் கஷ்டமான வேலை. வழியில் தங்குவதற்குப் பல மடங்களும், குடிசைகளுமிருக்கின்றனவாம். மலையுச்சியில் கௌரிகந்து என்ற குளமிருக்கிறது. பனிக்கட்டிகளையெல்லாம் கடந்து அங்கு எதிச்செல்லுவது கஷ்டமான வேலையாகும். அங்கு தாங்கமுடியாத குளிருமிருக்கிறதாம். ஆனல் கௌரிகந்து குளத்தை ஒருவர் அடைந்துவிட்டால் அவர் தம் களைப்பெல்லாம் மறந்துவிடுகிறார். ஏனெனில் அவ்விடம் அவ்வளவு இயற்கை அழகு பொருந்தியிருக்கிறதாம். அல்மோராவிலிருந்து மன்சரோவாவரை 200 மைல் தூரத்தையும் கால் நடையாலும் அல்லது தொட்டில் மூலமாகவும் தினம் ஒன்றுக்குப் பத்துமைல் வீதம் நடந்து செல்லவேண்டியதாயிற்று. மகாராஜா இவ்வழியைக் கடந்து ஜூலை 22-ந்தேதி வந்துசேர்ந்தார். மகாராஜா இப்போது திரும்பிக்கொண்டிருக்கிறார். அல்மோராவிலிருந்து ஹரித்துவாரத்துக்குச் சென்று 24-ந் தேதிவாக்கில் சிராவணம் செய்வார். செப்டம்பர் முதல்தேதிவாக்கில் அவர் மைசூர் தலைநகரம் வந்து சேரக்கூடும்.

### அடுத்த மாகாண சுயமரியாதை மகாநாடு.

அடுத்த (நான்காவது) மகான சுயமரியாதை மகாநாட்டை நாகர்கோவிலுக்கு அழைத்திருக்கின்றார்கள். இவ்விருப்பத்தை (நாகர்கோவில்) திரு. சிதம்பரம் பி. எ. பி. எல். விருதுநகர் மகாநாட்டில் எடுத்துக்கூறி கூடியவரையிலும் சிறப்பாக நடத்துவோமென்று உறுதி கூறினர்.

### நோட்டீஸ்.

தேவகோட்டை A. K. கோவிந்தசாமி நாயிடு சகல ஜனங்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்.

என் மகன் திருவேங்கடம் என்ற கண்ணன் என்பவன் கெட்ட நடத்தையாய் தன் சுயநலந் தெரியாமல், எடுப்பார் கைப்பிள்ளையாய் நடந்து வருவதை அட்வான்டேஜ் எடுத்துக் கொண்டு சிலர் யாதொரு பிரதிப்பிரயோஜன மின்றி பிராட்டு ரிக்கார்டுகள் தயாரித்து வாங்கியி நுப்பதாகவும், ஷை பையனும் அனுவசியமாகவும் அக்கிரமமாகவும் செலவு செய்திறவனுகவுமிருப்பதில், ஷை யானுக்கு எவரும் கடன் முதலியது கொடுக்கவோ கூடாது. ஷை யான் கடன் வாங்கத் தேவையும் அவசியமுமில்லை. அவ்விதம் கொடுத்தால் அது என்னையும் என் சொத்துக்களையும் கட்டுப்படுத்த மாட்டாது. குடும்பத்துக்கு யாதொரு சொத்தும் கிடையாது. ஷை பையனுக்கும் என் சுயார்ஜித சொத்துக்களுக்கும் யாதொரு பாத்தியமும் இல்லை.

A. K. கோவிந்தசாமி நாயுடு.
தேவகோட்டை.
1—8—31

### நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா, எழுவங்கோட்டைத் தாலுகா காரைக்குடி முத்துப்பட்டணத்திலிருக்கும் வினைதீர்த்தான் செட்டியார் மகன் வி. பழ. பழனியப்பச் செட்டியார் சகலமான ஜனங்களுக்கும் தெரிவிப்பதாவது. என் பெரிய தகப்பனர் வெங்கடாசலஞ்செட்டியார் மகன் லேட் பழனியப்பச்செட்டியாருடையதும், எனக்குச் சேரவேண்டியதும் கீழ்க்கண்ட நான்கு எல்கைக் குள்பட்டதுமான இடம், வீடு வகையறுவும் ஷை வீட்டுத் தோட்டத்துக்கு எதிர்த்த தனி காலியிடமும் நாளதுவரை என் அனுபவத்திலிருந்து வருவதை சிலர் துர்போதனையின் பேரில் மேல்கண்ட லேட் பழநியப்பச் செட்டியார் பெண் சாதி விதவை உமையாளாச்சி என்பவள் விற்று வியாபித்துக்கொள்ள நினைத்து விலை பேசுகிறதாகத் தெரிகிறது. மேற்படி உமையாளாச்சிக்கு மேற்படி வீடு, இடம் வகையறுக்களை விற்க யாதொரு பாத்தியமும் கிடையாது. அப்படி விற்று வாங்கினலும் வாங்குகிறவர்களுக்கும் செல்லத்தக்கதில்லை. ஷை வீடு, இடம் வகையறு எனக்கே உரிய தென்பதற்கு மேற்படி வெ. பழ. பழநியப்ப செட்டியார் முறியும் எழுதித் தந்திருக்கிறார். மேற்படி பழநியப்ப செட்டியாருக்கு நானே வார்சுதாராகையால் மேற்படியார் சொத்துக்களை என்னையன்னியில் யாரும் எப்பவும் விற்க வாங்க அதிகாரமில்லை.

ஷை சொத்துக்கள் விபரம்.

1 காரைக்குடி முத்துப்பட்டணம் 2-வது வீதியில் நான் குடியிருந்து வருகிற வீட்டுக்கும் தெற்கு. கரு. வ. வள்ளியப்ப செட்டியார் வீட்டுக்கும் கிழமேலோடிய பாதைக்கும் வடக்கு தென்வடலோடிய பெரிய வீதிக்கும் மேற்கு 2 வது லெக்க சொத்துக்கும் சந்து பாதைக்கும் கிழக்கு இதற்குள்பட்டது ஷை வீடு வகையறு.

2 ஷை வீட்டுக்கும் சந்து பாதைக்கும் மேற்கு. சுப்பனசாரி வகையறு இடங்களுக்கும் பாதைக்கும் வடக்கு தென்வடலோடிய வீதிக்கும் கிழக்கு. காளியம்மை வீட்டுக்கும் தெற்கு. இதற்குள்ப்பட்ட தனி காலியிடம்.

வி. பள. பழநியப்ப செட்டியார்,
முத்துப்பட்டணம்,
13-8-1931 காரைக்குடி.

### நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா கானடுகாத்தான் கா. சு. பழ. ராம. ராமஞ்செட்டியார்இதனல் சகலருக்கும் தெரிவிப்பதென்னவென்றால், என் குமாரனுகிய பழணியப்பனுக்கு சுமார் வயது 20க்குள்ளாக விருக்கலாம். ஷையானுக்கு கலியாணமாகியிருக்கிறது. ஷை பழணியப்பன் கேட்பார் பேச்சைக் கேட்டும்தான்சுயபுத்தியில்லாதுபிரத்தியில் பிராம்சரி நோட்டு, அசையாப்பொருள்சொத்துக்களை அடமானம் வைத்து சொற்ப துகைகளை வாங்கிக்கொண்டு பெருந்துகைகளுக்கு எழுதிக் கொடுப்பதாகத் தெரிகிறது. ஷை பழணியப்பனுக்குக் குடும்ப விஷயமாகவும், மற்ற எந்த விஷயங்கட்கும் கடன் வாங்க ஒருவிதமான அதிகாரம் கிடையாது. என் சொத்துக்கள் யாவும் என்னுடைய சுயார்ஜிதம். மேலும் இப்போது ஷையான் வாங்கியிருக்கும் கடனுக்கும், இனிமேல் வாங்குகிற கடனுக்கும், ஊர் சொத்துகளிலாவது, தொலைகளிலாவது ஷை பழணியப்பனுக்கு செல் கொடுத்தவர்கள் தொடர்ந்து வாங்க செல்லா தென்பதை இதின் மூலம் தெரிவித்திருக்கிறது.

மெட்டிலா, 22-7-31. } (Sd.) கா. சா. பழ. ராம. ராமஞ் செட்டியார்.

# சுயமரியாதை இளைஞர் மகாநாடு.

9—8—31-ந் தேதி நண்பகலுணவுக்கு மேல் இளைஞர் மகாநாட்டை யுன்னி மீண்டும் எல்லோரும் வந்து கூடினர்கள். ஆனால் தலைவராக வர விசைந்திருந்த திரு. நாராயணப் பெருமாள் விஜயம் செய்யாதது பற்றி மாலை 5-45 ரயிலில் அவருடைய வருகையைப் பார்க்கும்பொருட்டு மகாநாடு ஒத்தி வைக்கப்பட்டது. என்றாலும் ஜனங்கள் ஆவலுடனிருந்ததால் ராமசாமிப் பெரியாரும் வேறு சில அன்பர்களும் சுயமரியாதை இயக்கத்தைப் பற்றிய சில அரிய மொழிகளைக் கூறினார்கள்.

### இளைஞர் மகாநாடு.

பின் சுமார் 5-45-க்கு இளைஞர் மகாநாடு ஆரம்பித்தது. திரு. எஸ். ஜயராம் அவர்கள் தமது வரவேற்புப் பிரசங்கத்தைப் படித்தார். அது வருமாறு:—

### உபசரணைத் தலைவர் பிரசங்கம்.

வாலிப பிரதிநிதிகளே!

இந்தச் சமதர்ம மண்டபத்தில் குழுமியிருக்கும் எனது அன்புள்ள சகோதர வாலிபப் பிரதிநிதிகளாகிய உங்கள் எல்லோரையும் வரவேற்கிறேன். நாம் இங்கு கூடியிருப்பதன் நோக்கம் நமது தேசத்தில் சமத்துவம் வளர்வதற்கும், சமதர்மம் ஓங்குவதற்கும் மார்க்கம் எவை என்பதைத் தீர்மானிப்பதற்காகவே கூடியிருக்கிறோம். வாலிபர் மகா நாட்டின் வேலை என்ன? சிலர், வாலிபர் இயக்கம் என்றால் எதையும் ஆராய்ந்து பாராமலும் நிதானமில்லாமலும் வீரவேசத்துடன் முடிவுசெய்யும் தன்மையுள்ள கூட்டம் என்று கருதுகின்றார்கள். வாலிபர்கள்தான் பொறுமையுடன் காரியங்கள் செய்ய வேண்டியர்களாக இருக்கின்றார்கள். பழமையானவர்கள்வழிகளைக்கண்டுபிடித்தால் வாலிபர்கள் அதை நிறைவேற்றி வைக்கும் பொறுப்பையுடையவர்களாகின்றார்கள்.

உலகில் பல இயக்கங்களும் வாலிபர்களின் ஒத்தாசையையே தேடுகின்றன. திரு. காந்தி அவர்கள் பெரிய கக்ஷிகளுடன் போட்டி போட தயாராயிருந்தாலும் திரு. ஜவஹர்லா (இளைஞர்) லுடன் மனப்பேதம் கொள்ள அஞ்சுகின்றார். வாஷிங்டன், தெருவில் செல்லும் குழந்தைகளுக்கெல்லாம் வணக்கம் செய்வாராம். கிரேக்க ஞானியான சாக்ரடீஸ் முதல், காலம் சென்ற நமது சுவாமி விவேகானந்தர் வரை பெரிய ஞானிகள் எல்லாம் வாலிபர்களைப்பற்றிப் பெருமையாக எழுதியிருக்கிறார்கள். ஏன்? வாலிபர்களிடம் எடுத்த காரியத்தை விடாமல் சாதித்து வெற்றிகரமாக நடத்திக் காண்பிக்கும் தன்மையிருக்கின்றது.

### நமது அரசியல்.

நமது தேசத்தில் ஒரு சாரார் சமுதாய விடுதலையை விட அரசியல் விடுதலைக்காகவே முதலில் பாடுபட வேண்டுமென வாதிக்கின்றனர் இன்னொரு சாரார், சமூக விடுதலையே, இந்தியா சம்பந்தப்பட்ட மட்டில், ராஜ்ய விடுதலையைவிட மிக்க அவசியமானது என நினைக்கிறேன். பல்வேறு மதங்களும், ஜாதிகளும் நிரம்பியிருக்கும் நம் பரதகண்டத்தில் அடிக்கடி ஏற்படும் குழப்பங்களுக்கும், சச்சரவுகளுக்குக் காரணம் என்னவென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. ஹிந்து முஸ்லீம் சச்சரவு ஒரு பெரிய பிரச்சினையாக இருந்துவருகிறது. அதுபோக ஜாதிச் சண்டைகளும், வைதீகர்களின் சண்டைகளும், நூற்றுக்கணக்காக நடந்து வருகின்றன. இவற்றைஅரசியல் விடுதலை மூலம் தீர்க்கலாமென்பதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. அன்னிய அரசாங்கம் இந்தியாவில் இருக்கும் பொழுதே, தாழ்த்தப்பட்டவர்களுக்கும் தீண்டாதவர்களுக்கும் ஏதாவது கதிமோக்ஷம் ஏற்படும். திரு. காந்தியவர்கள் மூலமாக நாம் எதிர்பார்க்கும் "ராமராஜ்யத்தில்" இவர்களுக்கு ஓர் விடுதலை காலம் வருமென்பதில் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஜாதி ஹிந்துக்கள் மெஜாரிட்டியாக இருக்கும் ஓர் அரசியல் நிர்வாகத்தில், அவர்களால் தாழ்த்தப்பட்டவர்கள் தீண்டாதவர் என்று கருதப்படுகிறவர்களுடைய முன்னேற்றத்தையும் விடுதலையையும் எவ்விதம் அமலுக்கு கொண்டுவர முடியும்?

## திரு. எஸ். ஜயராமின் விரிவுரை

### இளைஞர்களே தேசத்தின் உயிர்நாடி.

நான் தேசிய இயக்கத்தை வெறுக்காவிட்டாலும், தேசிய விடுதலைக்கு முன் சமூக விடுதலை நம் நாட்டுக்கு அத்தியாவசிய மென்பதை ஞாபக மூட்டுகிறேன். காங்கிரஸ் திட்டத்தில் தீண்டாமை, முதலியவற்றை ஒழிப்பது என்பதை எழுத்தளவில் தான் பார்க்கிறோம். அதற்காக, எத்தனை தேசத்தலைவர்கள் இதுவரை பாடுபட்டிருக்கிறார்கள் என்று நான் கேட்கிறேன். தேசிய விடுதலை நமக்கு கிடைக்கு முன் சமூக விடுதலை ஏற்படாவில், அத்தேசிய விடுதலை நம் நாட்டுக்கு விடுதலையாகாது. இதே அபிப்பிராயத்தை சர். கே. வி. ரெட்டியவர்கள் சொல்லி யிருக்கிறார்கள். (Social reform must precede political reform) ஆகையால் நாம் தேசீய விடுதலையைக் குறித்து போர் நடக்கும் அரசியல் இயக்கங்களுடன் சேர்வதைவிட, சமதர்ம இயக்கத்தை தனியாக நிறுவி வேலை செய்ய வேண்டும்.

### நமது இயக்கம்.

சுயமரியாதை இயக்கம் மனித சமூகத்தில் புதிதல்ல; அது உலகத்தில் பல்வேறு இடங்களில் பல்வேறு பெயர்களுடன் பரப்பப் பட்டுவருகிறது. மேல்நாடுகளில் நேஷனலிஸ்ட்(Nationalist) அறிஞர்கள் (Free-thinkers) போன்ற இயக்கங்களும், இத்தாலியில் முசோலீனியின் பாஸிஸ்ட் (fascist) இயக்கமும், ருஷியாவில் போல்ஷவிக் (Bolshwik) கொள்கைகளும், துருக்கியில் கெமால் இயக்கமும் சுயமரியாதைத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டனவே. அவைகளும் தங்கள் போராட்டத்தில் வெற்றியுற்றிருக்கின்றன. பெண்களை அடிமை கொள்வதையும், அவர்களுக்கு சொத்துரிமை மறுப்பதையும் நாம் கண்டிக்கிறோம். பாலிய விவாஹத்தை நாம் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. கன்னிகை விதவைகள் கணவன் இன்றி கண்ணீர்விட்டு வாடுவதை யார்தான் சகிக்கமுடியும்? இவைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கிற எம்மதமும் நமக்கு வேண்டியதில்லை. ஒரு குலத்தான் இன்னொரு குலத்தானை தாழ்த்தி அடிமைப்படுத்திக் கொள்ள, அவன் பிறப்பே காரணமென்று சொல்லும் எம்மதத்தையும் பரவவிட்டுக் கொண்டிருக்கமுடியாது. அதைத் தகர்த்தெறிவதில் நம்முன் எவை முட்டுக்கட்டையாயிருப்பினும் நாம் பயப்படப்போவதில்லை. கடவுளானாலும் சரி, சாஸ்திரமானாலும் சரி, வேதமானாலும் சரி, நமக்கு எதிர்ப் பாகவருவது எவை யானாலும் அவைகளை லக்ஷியம் செய்யாமலும் ஊக்கம் குன்றாமலும், நமது கொள்கைக்காக போராட வேண்டியது நம் கடமையாகும்.

ஆகையால் என் அன்பார்ந்த வாலிபப் பிரதிநிதிகளே! நித்திரையிலிருந்து விழித்தெழுங்கள். உங்கள் முன் தோன்றும் எவ்வித பிரச்சினையைப் பற்றியையும் உங்கள் மனச்சாக்ஷிக்கு சில கேள்விகள் போடுங்கள். அவைகள் என்ன முடிவைத் தருகின்றனவோ அவ்விதம் செய்யுங்கள்.

இறுதியாக மறுமுறையும் உங்களையும் நம் தலைவரையும் சந்தோஷத்துடன் வரவேற்கின்றேன்.

இப்பிரசங்கத்திற்குப் பிறகு திரு. வி. வி. ராமசாமி யவர்கள் பிரேரேபிக்க திரு. கி. ஆ. பெ. விஸ்வநாத மவர்கள் ஆதரித்ததின் பேரில் திருச்சி திரு. டி. வி. சோமசுந்தரம் பி. ஏ. பி. எல். அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார்கள். அவர்களது உணர்ச்சியான பிரசங்கத்திற்குப் பிறகு அடியில்வரும் தீர்மானங்கள் நிறைவேறின.

### தீர்மானங்கள்.

(1) சமதர்ம தத்துவமும் பொது உடைமை கொள்கையும் நாட்டில் ஓங்க வேண்டும் என்பதே நமது லக்ஷியமாய் இருக்கின்றபடியால் விதி, கடவுள் செயல் என்பது போன்ற உணர்ச்சிகள் மக்கள் மனதிலிருந்து ஒழிக்கப் படவேண்டும்.

பிரேரேபித்தவர் திரு. ஈ. வெ. ராமசாமி.

(2) மக்கள் யாவரும் ஒன்று படவேண்டுமானால் மத பிரிவுகளும் மதசம்மதமான பழக்க வழக்கங்களும் ஒழியவேண்டும்.

பிரேரேபித்தவர் திரு. அ. பொன்னம்பலனர்.

(3) வர்ணாசிரமத்திலும் கடவுள்செயலென்பதிலும் நம்பிக்கை யிருக்கிற யாராலும், மக்களுள் சமத்துவமும் விடுதலையும் அடையும்படி செய்யமுடியாது என்று இந்த மகாநாடு உறுதியாக சொல்லுகிறது.

பிரேரேபித்தவர் திரு. சொ. முருகப்பா.

(4) பெண்களுக்கு ஆண்களைப்போலவே எல்லா உரிமைகளும் வழங்கப்பட்டாலொழிய பெண்கள் விடுதலை ஏற்படாதென்று இந்த மகாநாடு கருதுவதால் எல்லாத் துறைகளிலும் பெண்களுக்கு சமத்துவம் கொடுக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறது.

பிரேரேபித்தவர் திருமதி. மாகதவல்லியார்.

(5) ஸ்தலஸ்தாபனங்களிலும், பொதுக்குளம், பொதுப்பள்ளி, பொதுவழி முதலியவைகளிலும் சுயமரியாதை யுணர்ச்சியுடைய இளைஞர்கள் அடைய வேண்டிய உரிமைக்காக கூடிய விரைவில், திருச்சி பெரம்பலூரில் தாழ்த்தப்பட்ட மக்களால் ஆரம்பிக்கப் போகும் சத்யாக்கிரக இயக்கத்திற் குட்பட்டவர்களும் இம்மகாநாடு வேண்டிய ஆதரவு கொடுக்க வேண்டுமாய் கேட்டுக் கொள்ளுகிறது.

பிரேரேபித்தவர் திரு. சாமிநாதன். ஆமோதித்தவர் திரு. எஸ். ராமசாமி.

(6) பெண்கள் விடுதலைக்கும் அறிவுவளர்ச்சிக்கும் பிள்ளைபேறு தடையாயிருப்பதாலும், எதிர்காலத்தில் நாகரிக வளர்ச்சிக்கு பொறுப்பு ஏற்றுக் கொள்ளப்போகும் தற்காலத்தில், குழந்தைகளை போதிய போஷணத்துடனும் கல்வியுடனும் வளர்க்கவேண்டியது அவசிய மானதாலும் பிள்ளைப் பேற்றை அவரவர்கள் தங்கள் தேகநிலை பொருள்நிலை, அறிவுநிலைக்குத் தக்கவாறு அடக்கியாள வேண்டுமென்று இம்மகாநாடு கருதுவதோடு சர்ப்பாட்சிக்கு வேண்டிய சாதனங்களையும் முறைகளையும் பற்றிய அறிவைப் போதிக்கத்தக்க ஸ்தாபனங்களை (clinics) ஏற்படுத்த வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

பிரேரேபித்தவர் பெரியார் ஈ. வெ. ராமசாமி. ஆமோதித்தவர் திரு. கே. வி. அழகர்சாமி.

மகாநாடு இரவு 8-30-தோடு முடிவுற்றது. பின் இரா போஜனத்திற்குப் பிறகு திருச்சி தமிழர் சீர்திருத்த சங்கத்தாரால் நடிக்கப்பட்ட "மூன்று நண்பர்கள்" என்ற நாடகம் நடைபெற்றது. அந் நாடகம் மூடப்பழக்கங்களைநீக்குதல், வைதீகர்களின் ஏமாற்றம், விதவை மணத்தின் அவசியம், கலப்பு மணத்தின் சிறப்பு, பார்ப்பனர் ஏமாற்றமாகியவற்றைத் தெள்ளத் தெளிய காட்டின. நடிகர்கள் உணர்ச்சியோடு தொழிலாக நாடகம் நடத்துபவர்களைவிட மிகச் சிறப்பாக நடத்தினார்கள். இரவு 3-க்கு நாடகம் முடிவுற எல்லோரும் அவரவர் ஊர்களுக்கு பிரயாணமானார்கள்.





# இரண்டாவது பெண்கள் மகாநாடு.

(6-ம் பக்கத் தொடர்ச்சி.)

பொழுது மத நடுநிலையென்று சொல்லப்பட்டதோ அப்பொழுதே நமது முன்னேற்றத்துக்குச் சாவுமணி யடித்தாகிவிட்டது. ஏன் என்றால் அந்த விளம்பரத்தின்படி எந்த சட்டத்திருத்தத்தைக் கொண்டு போனாலும் மதத்திற்கு முரணானது என்ற வாதத்தினால்தள்ளிவிடும்உரிமை அரசாங்கத்துக்குகிடைத்துவிட்டது. இதுவரையிலும் நாம் கொண்டுபோன பல சட்டங்கள் அவ்வண்ணமே தள்ளப்பட்டிருக்கின்றன.

இப்போது இந்தியாவுக்கு வரப்போகின்ற சீர்திருத்தத்தில் பல குறைகளிருக்கின்றன. சமீபத்தில் நடைபெற்ற ஓர் காங்கிரஸ் கூட்டம், மத நடுநிலைமை வகிப்பதென்று தீர்மானித்திருக்கின்றது. மத நடுநிலைமை ஒரு நாட்டிலிருக்கும் காலமளவும் ஜாதி வித்தியாசமும் தீண்டாமையும் ஒழியவே ஒழியாது. 2 வருஷத்திற்குமுன் சர்வகட்சிமகாநாடு கூடியபோது இத்தீர்மானத்தை அங்கு கொண்டுவந்தார்கள். அதனை எல்லோரும் ஆதரிக்க, நான் ஒருவனே எதிர்த்துப் போராடினேன். மதநடுநிலைமைத் திட்டம் உயிரோடிருக்குமானால் நம்மால் என்ன திட்டத்தை நிறைவேற்ற முடியும்? பெண்களுக்கு 18 வயதுக்குமேல்தான் கல்யாணம் செய்ய வேண்டுமென்று ஒரு சட்டத்தை சட்ட சபையில் கொண்டுவந்தால் ஒருவர் எழுந்திருந்து என் மதம் அதனை மறுக்கின்றது என்று கூறினால் எவ்வாறு நாம் அச்சட்டத்தை நிறைவேற்றமுடியும்? இந்தச் சட்டத்தில் பிண்டம் போடுகிறவர்கட்கே வாரிசு பாத்தியதை உண்டு என்றெழுதப்பட்டிருக்கின்றது. இதனை மத நடுநிலைமை யென்ற பேரால் ஒரு அரசாங்கம் ஒப்புமானால் பிண்டம் போடாத ஒரு சீர்திருத்த வாதிக்கு எவ்வாறு வாரிசு பாத்தியதை வரும். இப்படி பல விஷயங்களை யோசித்தால் மத நடுநிலை எவ்வளவு கெடுதியானதென்பது புலனாகும். எனவே, எத்தகைய சுயராஜ்யம் உங்கட்கு வேண்டுமென்று ஆராயப்படுகின்ற இந்த வேளையில் நாமெல்லோரும் விழிப்புடனிருந்து நன்றாக விஷயங்களை ஆராயவேண்டுவதுதான. அதோடு நமது லட்சியத்தைத் தெரிவிப்பதும் முறையாகும். அத்தகைய தருணத்தில் நமக்குள் பிளவு ஏற்படும் வண்ணம் நடப்பது தவறேயன்றிவேறென்ன?

நமது இயக்கம் நன்றாக வளர்ந்து வருகின்றது. அது வட இந்தியாவிலும் பரவியிருக்கின்றது. பஞ்சாபில் ஜாட்பாட்தோறாக் மண்டல் என்றொரு சபை ஏற்பட்டிருக்கின்றது. அது ஜாதியை ஒழிப்பதே இன்பவாழ்க்கை யென்றெண்ணி தீவிரமாக உழைத்து வருகின்றது. நான் சமீபத்தில் டில்லியிலிருந்தபோது அச்சங்கத்தைச் சேர்ந்த பலர் என்னை வந்து பார்த்தார்கள். நான் அவர்களிடம் நமது இயக்கத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொன்னேன். அவர்கள் அளவுகடந்த சந்தோஷ மெய்தினார்கள்.

பம்பாயிலும் அதுபோல ஒரு முயற்சி நடக்கிறது. Rationalist association (பகுத்தறிவுசங்கம) என்றொரு சங்கத்தை உற்பத்தி செய்து அதிலிருந்து ஒருமாதப் பத்திரிகையை வெளியிட்டு வருகின்றார்கள். நமது இயக்கத் தத்துவத்தை வெளியே காட்டுவதானால் வடநாடும் ஆதரிக்கும். அப்போது தேசியவிடுதலை, சமூக விடுதலை இவைஏற்படும். இவ்விரண்டும்ஒன்றேயாகும். நமது நாட்டின் விடுதலையில் நானும் ஆர்வம்காட்டுகின்றேன்; ஏனென்றால் சாஸ்திரக் குப்பைகளை ஒழித்து மூடப்பழக்க வழக்கங்களை நீக்கி நமக்கு உணர்ச்சி யுண்டென்பதைக் காட்ட விரும்புகின்றேன். இவ்விருப்பமே உங்கட்குமிருக்குமென்பது எனது அபிப்பிராயம்.

இத்துடன் பேச முடியவில்லையாகையால் மன்னிப்பீர்களென்று நினைக்கின்றேன்.

இதன் பிறகு கூட்டம் இடை வேளை போஜனத்திற்காகக் கலைந்தது. டிக்கட்டு வாங்கியவர்கட்கே உணவென்றிருந்ததால் எல்லோரும் டிக்கட்டு வாங்கியிருந்தார்கள். உணவு விசேஷமான பதார்த்தங்களுடனும் எவ்வித அபிப்பிராய பேதமும் வாராவண்ணமும் கொடுக்கப்பட்டது. (ஈண்டு நடைபெற்றது முழுதும் கலப்புசமபந்தி என்பது குறிப்பிட வேண்டுவதில்லை. ஒருவராவது நான் சமபந்திபோஜன மருந்தத் தகுந்த தியாக புத்தி பெற்றுவிட்டேன் என்று பெருமை பாராட்டுகின்ற மனப்பான்மையைக் காட்டாது உணவருந்தினார்கள் என்பது நமதியக்கம் நாட்டில் உண்டு பண்ணியிருக்கும் உணர்ச்சிக்கு ஓர் எடுத்துககாட்டாகும்.)

## ஸ்ரீமதி இந்திராணி பாலசுப்பிரமணியமவர்களின் ஊழியம்.

### பெண்கள் மகாநாடு.

மீண்டும் நண்பகலுணவுக்குப்பிறகு எல்லோரும் கூடினார்கள். அப்போது பெண்கள் மகாநாடு நடைபெற்றது. ஸ்ரீமதி பத்மாவதி திருவண்ணாமலை அம்மையார் வரவேற்புப் பிரசங்கத்தைப் படித்தார். அதன் சாராமாவது:-

### சகோதரிப் பிரதிநிதிகளே!

பல வருடங்களாய், ஆண்களாலும் மதத்தாலும், ஜாதிக் கட்டுப்பாட்டாலும், பழக்க வழக்கங்களின் பெயராலும் அடிமைகளாக்கப்பட்டு வந்த பெண்களின் விடுதலையைக் குறித்து இங்கு கூடியிருக்கும் எல்லா சகோதரிகளையும் மிகுந்த சந்தோஷத்துடன் வரவேற்கின்றேன்.

நமது தலைவி அவர்கள் ஆரம்பத்தில் தஞ்சை ஜில்லாவிலும், பிற்காலத்தில் கஞ்சம் ஜில்லாவிலும் பல ஸ்தலஸ்தாபனங்களில் நிர்வாகம் வகித்து அதன் மூலம் பெண்களின் சுதந்தரத்திற்காகப் பாடுபட்டு வந்திருக்கிறார்கள். இந்தியா முழுமையிலும் எங்கும் கண்டிராதபடிபெர்ஹாம்பூர் முனிசிபல் சபையில் பலத்த போட்டியினிடையே உபதலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தனது ஆயுள் முழுமையும் பல பெண்கள் ஸ்தாபனமும், குழந்தைகள் ஸ்தாபனமும் ஆரம்பிப்பதிலும், அதில் உத்தியோகம் வகித்த காலத்தும், அவைகளை விருத்தியடையச் செய்வதிலுமே அவாவுடையவர்களாக இருந்து வந்திருக்கிறார்கள். அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட இத்தகைய ஸ்தாபனங்களை இன்னும் தஞ்சாவூர் ஜில்லாவிலும் கஞ்சம் ஜில்லாவிலும் நாம் காணலாம். அவர்கள் சமீபத்தில் அதாவது 1931-ம் வருஷம் ஜனவரி மாதம் லாகூரில் நடந்த அகில இந்திய பெண்கள் கல்வி சமுதாய மகாநாட்டுக்கும் அகில ஆசிய மாதர் மகாநாட்டுக்கும் நமது பிரதிநிதியாகச் சென்று பல தொண்டுகள் ஆற்றியிருக்கிறார்கள். இத்தகைய அனுபவம் வாய்ந்த தலைவி அவர்கள் நமது மகாநாட்டிற்குக் கிடைத்ததுகுறித்து நான் பெருமகிழ்ச்சி அடைவதுடன் அவர்களை நம்மிடையே வரவேற்பதில் அளவிலா பெருமை கொள்கிறேன்.

இத்தகைய பெண்கள்மகாநாட்டின் அவசியத்தை இந்த நூற்றாண்டிலும் நான் சொல்லத் தேவையில்லை. உலகில் உள்ள மற்ற தேசப் பெண்களை விட நம் தேசப் பெண்களை ஆடவர்கள் அதிகமான அடிமைத்தனத்தில் ஆழ்த்தி வைத்திருக்கின்றனர். அதற்கு வேண்டிய கடவுள் சம்மதம் பெற்றதெனச் சொல்லப்படும், பல வேத சாஸ்திர பிரமாணங்களையும் உண்டு பண்ணி ஔவை போன்ற நம் இனத்தார் வாயிலிருந்து வந்தது என பல பொய் பழமொழிகளையும் தங்களுக்கு ஆதாரமாக ஏற்படுத்திக்கொண்டனர். கால சக்கரத்தின் வேகத்தின் பயனும், நம்மை அறியாமலே யாரோ செய்த முயற்சியின் பயனும், பெண்களிடையே விழிப்பு ஏற்பட்டுவிட்டது. எத்தகைய கதைகளும் பழமொழிகளும் முறையே கடவுளாலும் நமது சகோதரிகளாலும் உண்மையில் சொல்லப்பட்டிருந்தாலும் நாம் அதை தற்காலத்தில் ஏற்றுக்கொள்ளப்போவதில்லை. அக்கடவுள் காலம் வேறு; நாம் வாழும் நிலைமை வேறு. ஆகையால் நமது கால தேச வர்த்தமானத்திற்குத் தகுந்தவாறு நமது சவுகரியத்திற்கு வேண்டியவைகளை நம்மை அடிமைப்படுத்தினவர்களிடமிருந்து அபகரிப்பதில் நம் முயற்சியைச் செலவழிப்பதே புத்திசாலித்தனமாகும்.

தற்பொழுது நம்மைப் பொறுத்தமட்டில் ஆண்கள்எவ்விதச் சுதந்திரத்துடன் வாழ்கின்றார்களோ அவ்வித சுதந்திரத்துடனே நாமும் வாழப்பிரியப்படுகிறோம்.

தற்பொழுது அமலில் இருந்து வரும் நடைமுறைப்படி நம்மில் பெரும்பாலோருக்குச் சொத்துரிமை கிடையாது. ஆண்களைப்போன்று, சந்தோஷகரமான காரியங்களில் நண்பர்களுடன் கலந்து உறவாடும் உரிமையும் இல்லை. தேகாரோக்கியத்திற்திற்காக செய்யப்பட்டுவரும் பயிற்சிகளும் பயிற்சிக்கூடங்களும் நமக்குக் கிடையா. இத்துடன், கலியாண விஷயங்களிலும் நமக்கு சுதந்தரம் அளிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். நமக்குப் பெரிய மந்திரி வேலைகள் தேவையில்லை. நம்மிடம் சிந்தனை சக்தி இருக்குமானால் அவைகளைப் பின்னால் எளிதில் பெற்றுக் கொள்ளலாம். நமக்கு இப்பொழுது அவசியமாய் வேண்டுவது மேலே கூறப்பட்டக்குறைகள் உடனேநீக்கப் படவேண்டுமென்பதாகும். அதற்காக நாம் கூசாமல்கிளர்ச்சிகள்செய்யவேண்டும். இவ் விஷயத்தில் கல்வி கற்ற சில நம் சகோதரிகள்கூட, தம்மைச் சேர்ந்தபோதுஅறிவு இல்லாத சிலர் தம்மை ஏளனம் செய்கின்றனர் என்ற பயத்திற்காக தங்கள் முயற்சிகளைத் தணித்து வைக்கிறார்கள் என்பதை நோக்க நான் மிகவும் வருந்துகிறேன். காலதேச வர்த்தமானமும் நமக்கு அனுகூலமாக இருப்பதாக நான் கருதுகிறேன். பூனாவிலே புரோபசர் கார்வே என்பவர் மாதர்களுக்காகச் சர்வகலாசாலை ஏற்படுத்தி அவர்களை எதிர்கால வாழ்வுமுறைக்கு ஏற்றவாறு பயிற்சிசெய்து வருகிறார்கள். நமது நாட்டின் பல்வேறு பாகங்களிலும் நமது சகோதரிகள் மகாநாடுகள் கூட்டியும் பெண்கள் இயக்கம் ஆரம்பித்தும் குடும்ப சொத்துரிமை, கலப்பு-விதவா விவாகங்கள் சிசுவிவாகத் தடுப்பு போன்ற பிரச்சனைகளுக்காக பாடுபட்டு வருகிறார்கள். இக்கோரிக்கைகள் நமது முன்னேற்றத்துக்கு அத்தியாவசியமாய் இருப்பதால், நாமும் அவைகளைப் பரிசீலனை செய்து தக்கன இம்மகாநாட்டில் செய்யக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நமது தலைவி அவர்கள் நமது உதவியால் அதிகமான கிளர்ச்சி செய்யத் தயாராக இருக்கிறார்கள் என்றே நம்

(அடுத்தபக்கம் பார்க்க)

(முன்பக்கம் தொடர்ச்சி)

புகிறேன். அவர்கள் ராஜமஹேந்திர புரத்தில் ஓர் பெண்கள் சங்கம் நிறுவி, அச்சங்கத்தில் கோஷா ஸ்திரீகளைக் கூட அங்கத்தினர்களாகச் சேரும்படி தூண்டி, பாட்மிண்டன், டென்னிஸ் போன்ற விளையாட்டுகளையும் பழக்கிக்கொடுத்திருக்கின்றனர். அவர்களின் முயற்சியும் உதவியும் நமக்குக் கிடைக்குமானால், நமது கிளர்ச்சியை இன்னும் பலப்படுத்திவிடலாம். சுயமரியாதை இயக்கத்தை பலப்படுத்துவதே நமது விடுதலையின் அஸ்திவாரமாகும். திரு. R. K. ஷண்முகம் B. A., B. L., M. L. A., அவர்கள் நமக்கு அத்தியாவசியமாக வேண்டிய பல சட்டங்களை இந்திய சட்டசபையில் கொண்டுவந்து, சட்டமாக்க முயற்சிசெய்துகொண்டு வருகிறார்கள். அவ்வித சட்டங்கள் உண்டாகி, அவைகள் அமலில் உடனே நடத்தப்படுமானால் நாம் சீக்கிரம் விடுதலை அடைவது உறுதி.

இதன்பிறகு ஸ்ரீமதி இந்திராணி பாலசுப்பிரமணியம் அவர்கள் தலைமை ஸ்தானத்துக்கு பிரேரேபிக்கப்பட அவர்கள் தமது பிரசங்கத்தைச் செய்தார்.

பிறகு பலதீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**விஷயாலோசனைக் கமிட்டிக்கூட்டம்.**

அன்றிரவு பந்தலிலேயே விஷயாலோசனைக் கமிட்டிக்கூட்டம் நிகழ்ந்தது. தலைவர் ஷண்முகம் அவர்கள் தமது உடல் நலிவை முன்னிட்டு ஊருக்குப் போய்விட்டபடியால் திரு. சௌந்தரபாண்டியம் அவர்கள் தலைமை வகித்தார்கள். இரவு 3 மணிக்குக் கூட்டம் முடிவுற்றது.

**இரண்டாம்நாள் நடவடிக்கை.**

மீண்டும் 9-8-31-ந் தேதி காலை 9 மணிக்கு எல்லோரும் குழுமினார்கள். தலைவர்கள் சில வேலையால் பிந்தி வந்ததால் திரு. எஸ். கே. நாயரிடம் ஓர் பிரசங்கம் செய்யுமாறு சில அன்பர்கள் வேண்டினார்கள். நாயரவர்கள் ஆங்கிலத்தில் சுயமரியாதை இயக்கத்தைஆதரித்தும் ஜாதி, மதம், சமய முதலியவற்றைக் கண்டித்தும் கிராம வேலையின் சிறப்பை குறிப்பிட்டும் ஓர் அழகிய நீண்ட பிரசங்கம் செய்தார். சுமார் 11-க்கு தலைவர்கள் வந்தனர். திரு. மரகதவல்லியார் "ஜாதிபொறிப்போம்" என்ற கீதத்தை இன்னிசையுடன் பாடினார். பிறகு ஈ. வெ. ராமசாமிப் பெரியார் கேட்டுக்கொண்ட வண்ணம் திரு. சௌந்தரபாண்டியமவர்கள் தலைமை வகிக்க, கூட்டமாரம்பித்தது. அப்போது கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேறின.

(1) மனிதத்தன்மையைத் தடைபடுத்துவதற்கு மதத்தின் பேரால் ஏற்படுத்தப்பட்டுள்ள பழக்க வழக்கங்களே காரணமாயிருப்பதால் இந்த சு. ம. மகாநாடு எல்லா மதங்களும் மறைந்து போகவேண்டும் என்றும் மதங்கள் ஒழியும் வரை மனிதர்களுக்குள் சகோதரத்துவம் ஏற்படாதென்றும் அபிப்பிராயப்படுகிறது. இந்திய தேசத்தில் தோன்றியுள்ள மதவேற்றுமைகளும் பிணக்குகளும் தீரவேண்டியானால் அறிவுள்ள இந்தியர்கள் மதஉணர்ச்சியை புறக்கணிக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறது.

திருச்சி திரு. பாலகிருஷ்ணன் பி. ஏ. பி. எல். இதனை பிரேரேபித்தார்.

திருச்சி டி. வி. சோமசுந்தரம் ஆதரித்தார்கள்.

(2) இந்திய சமூகத்தில் பறையின் காரணமாய் ஏற்படுத்தப்பட்டிருக்கும் வித்தியாசங்களுக்கு வருணாசிரமதருமக் கொள்கையே காரணமென்று இம்மகாநாடு கருதுகிறபடியால் வருணாசிரமத்தை சேர்ந்த எந்த இயக்கத்தையும் இம்மகாநாடு எதிர்க்கிறது.

(b) தீண்டாமை என்பது சமூகத்தில் உள்ள சகல ஜாதிகளையும் பிடித்த நோய் என்றும் தீண்டாமை ஒழிய வேண்டுமென்றால் பிராமணீயமும் ஒழியவேண்டும் என்றும் இம் மகாநாடு அபிப்பிராயப்படுகிறது.

பிரேரேபித்தவர் திரு. எஸ். ராமநாதன். திண்டுக்கல் திரு. டி. வி. சுப்பிரமணியம் அவர்களும் கஞ்சைமலை மூர்த்தியும் ஆதரித்தார்கள்.

## 3-வது மாகாண சுயமரியாதை மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள்.

(3) வருணாசிரமகொள்கையை வெள்ளை ஜாதியர் பின்பற்றுவதால் தான் நிற பேத சண்டை உலகில் வலுத்து வருவதால் கலப்பு மணங்களாலும் அறிவு ஆராய்ச்சி துறைகளில் ஒத்துழைப்பதின் மூலமும் இந்த வித்தியாசங்கள் நீக்கப்படவேண்டும் என்றும் அதற்காக அந்நிய பாஷைகளையும் கற்கவேண்டுமென்றும் இம் மகாநாடு கருதுகிறது.

(b) தேசீயத்தின்பெயரால்ஹிந்திபாஷையை கற்று ஆகவேண்டுமென்பது வருணாசிரமத்திற்கு ஆதரவு கொடுப்பதாய் இருப்பதால் இந்தக்கொள்கையை கண்டிக்கிறது.

பிரேரேபித்தவர் திரு. சொ. முருகப்பா. "சன்மார்க்கன் ஆசிரியர்" திரு. சிவநேசம் அவர்கள் ஆதரித்தார்.

(4) தற்காலலௌகீகமுன்னேற்றத்திற்கு அனுகூலமாக சட்டசபைகளில் வரும் முக்கியமான சீர்திருத்தச் சட்டங்களை எல்லாம் பிற்போக்கானவர்கள் மதத்தின் பேரால் ஆட்சேபிப்பதால் இம் மகாநாடு அரசாங்கத்தார் அனுசரித்து வரும் மத நடுநிலைமை கொள்கைகளை ஆட்சேபிப்பதுடன் மத நடுநிலைமையை ஆதரிக்கும் எந்த அரசியல் சமுதாய கட்சிகளையும் ஒப்புக்கொள்ள முடியாதென்றும் எதிர்கால இந்திய அரசியல் சீர்திருத்தத்தில் மத நடுநிலைமை யென்னும் கொள்கை நீக்கப்படவேண்டுமென்றும் வற்புறுத்துகிறது.

பிரேரேபித்தவர் திரு. ராமசந்திரன் சேர்வை, திரு. ஈ. வெ. ராமசாமிப் பெரியார் ஆதரித்தார்.

(5) நமதுஇயக்கத்திற்காகசண்டமாருதம் என்ற தமிழ் தினசரிப் பத்திரிகை இம் மகாநாடு தினத்தில் வெளிவந்துள்ளதற்கு நல்வரவுகூறிப் பெரிதும் பாராட்டுவதுடன் ஒவ்வொருவரும் சந்தாதாரராகச் சேர்ந்தும் பிறரையும் சேர்த்துப் போதிய ஆதரவளிக்கவேண்டுமாய் இம்மகாநாடு எல்லாப் பிரதிநிதிகளையும் கேட்டுக்கொள்கிறது.

பிரேரேபித்தவர் திரு. அ. பொன்னம்பலனார். திருச்சி திரு. டி. வி. சோமசுந்திரம் பி. ஏ. பி. எல்., அவர்கள் ஆதரித்தார்.

(6) பெண்கள்முன்னேற்றத்திற்கு பெண்களுக்கு சொத்துரிமை, கல்யாண உரிமை. கல்யாண ரத்து, விதவை மணம் ஆகியவைகளை அமலுக்குக் கொண்டுவர வேண்டியது அவசியம் என்றும் அதற்குற்ற சட்ட சம்பந்தமான காரியமும் பிரசார சம்பந்தமான காரியமும் செய்யவேண்டுமென்றும் இம் மகாநாடு தீர்மானிக்கிறது.

பிரேரேபித்தவர் திருமதி இந்திராணி பாலசுப்பிரமணியம். திருச்சி திரு. பாலகிருஷ்ணன் அவர்கள் ஆமோதித்தார்.

(7) பொருளாதாரதுறைக்கும் பொருள் விருத்திக்கும் இயந்திர வளர்ச்சிக்கும் சமதரும உணர்ச்சிக்கும் கதர் தத்துவம் எதிர்பது விரோதமாக விருப்பதால் கதர் தேசீய பொருளாதார கைத்தொழில் திட்டம் என்பதை இம்மகாநாடு மறுக்கின்றதுடன் தொழில் முறையில் இயந்திர வளர்ச்சியை இம்மகாநாடு ஆதரிக்கின்றது.

பிரேரேபித்தவர் திரு. எஸ். ராமநாதன் அவர்கள். திரு. சாமி சிதம்பரனார் ஆதரித்தார். திரு. ஜீவானந்தம் அவர்கள் ஆட்சேபித்தார்.

8. A. தலைமை சங்கத்தை ரிஜிஸ்ட்டர் செய்ய வேண்டுமாய் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

(B) நமதியக்கத்தை அகில இந்திய இயக்கமாக ஆக்குவதற்கும் நமது இயக்கக் கொள்கைகளை இந்தியா முழுதும் தெரிந்துகொள்ள வேண்டியும் ஓர் ஆங்கில வாரப்பத்திரிகையை விரைவில் ஆரம்பிக்க வேண்டுமாய் தீர்மானிக்கிறது.

பிரேரேபித்தவர் நாகர்கோவில் வக்கீல் திரு. பி. சிதம்பரம் அவர்கள். திரு. ஜீவானந்தம் அவர்கள் ஆதரித்தார்.

(9) ரயில்வே, முனிசிபாலிடி முதலிய எல்லைகளில் லைசென்ஸ் பெற்ற ஜாதி வித்தியாசத்தை (உயர்வு தாழ்மை) காண்பிக்கக்கூடியவாறு மக்களுக்குள் பார்ப்பனருக்கென்றும் பார்ப்பனரல்லாதாருக்கென்றும் தனித் தனி இடம் ஒதுக்கப்பட்டிருக்கும் சாப்பாடு காபி கிளப்புகளுக்கு இனிமேல் ரயில்வே போர்டாரும் முனிசிபாலிட்டியாரும் லைசென்ஸ் கொடுக்காமலிருக்கக் கேட்டுக் கொள்வதுடன் இதற்கு வேண்டிய சட்டத்தை இயற்ற சட்டசபை அங்கத்தினர்கள் ஊக்கத்துடன் சட்டமாக்கி அமலுக்குக்கொண்டுவரக் கேட்டுக்கொள்கிறது.

(b) மேற்கண்ட சமத்துவக் கொள்கையை கையாளும் மதுரை கோவாப்பரேடிவ் ரெஸ்டாரண்ட் என்னும் சமத்துவ உணவுச் சாலையில் பங்கெடுத்தும் சிற்றுண்டி சாப்பாடு முதலியவைகளை சாப்பிட்டும் ஆதரிக்கும்படி இம் மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

பிரேரேபித்தவர் திரு. ராம சுப்பிரமணியம். திரு. நாராயணன் அவர்கள் ஆதரித்தார்.

10 இராமநாதபுரம் ஜில்லா தேவகோட்டை டிவிஷனில் உள்ள ஆதித்திராவிடர்களின் துயரங்கள் சம்பந்தமாய் சென்னை சட்டசபையில் 5-8-1931-ல் நிறைவேறின தீர்மானப்படி விசாரணைக் கமிட்டி யொன்று சீக்கிரம் நியமிக்கும்படி சென்னை கவர்ன்மெண்டாரை இந்த மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

(11) சர்க்கார் விடுமுறை என்று பண்டிகைகளை பிரதானமாய் வைத்து லீவுகள் கொடுப்பது என்பது ஒரு வகையில் மூடப் பழக்கவழக்கத்தில் கட்டுப்பட்டதாயிருப்பதால் சர்க்கார் அந்த வழக்கத்தை விட்டுவிடவேண்டும் என்றும் அவசியமிருப்பவர்கள் தனி லீவு எடுத்துக்கொள்ளலாம் என்றும் இம் மகாநாடு தீர்மானிக்கிறது.

இந்த 10-ம் 11-ந் தீர்மானங்களையும் தலைவர் பிரேரேபித்தார்.

(12) அடியில்வருபவர்களைநிருவாகக்கமிட்டி அங்கத்தினர்களாக இம்மகாநாடு தேர்ந்தெடுக்கின்றது.

(பிரேரேபித்தவர் திரு ஈ. வெ. ராமசாமி பெரியார், இத்தீர்மானம் சிறிது வாதத்திற்கு பின் நிறைவேற்றப்பட்டது.)

திரு. ஆர். கே. ஷண்முகம் அவர்கள் (தலைவர்)
,, W. P. A. சௌந்தரபாண்டியம்,
இராமசாமிப்பெரியார்உபதலைவர்கள்)
,, எஸ். இராமநாதன் அவர்கள் (காரியதரிசி)
,, வைசு. ஷண்முகம் செட்டியார்,
,, எஸ். ராமச்சந்திரன்,
ஸ்ரீமதி இந்திராணி பாலசுப்பிரமணியம்
திரு. வி வி. ராமசாமி,
திருமிகு நீலாவதியார்,
திரு. நடராஜன் (தஞ்சை)
,, கி. ஆ. பெ. விஸ்வநாதம்,
,, சிவராஜ்.
,, எஸ். முருகப்பா,
,, கே. வி. அழகர்சாமி,
,, டி. வி. சோமசுந்தரம்,
,, கே. எ. பி. பி. கோபாலகிருஷ்ணசாமி,
,, சாமி சிதம்பரனார்,
,, சிதம்பரம் (நாகர்கோவில்)
,, ராஜமாணிக்கம் (சேலம்)
(மெம்பர்கள்.)

இந்தியாவில் மொத்தம் 30 லக்ஷம் டன் சர்க்கரை உற்பத்தி செய்யப்படுகிறது. 20 லக்ஷம் டன் வெளி நாட்டிலிருந்து வருகிறது. இதனால் 20 கோடி ரூபாய் வெளி நாடுகளுக்கு செல்கின்றது.

# உடற்கூறும்-உடற்பயிற்சியும்.

சாண்டோ. லெ. சோமசுந்தரன்.

உங்கட்குத் தேகாப்பியாசம் தேவை யென்பது ஒரு சாதாரணமான விஷயம். இதுபற்றித் தற்போது பிரமாதமாகப் பேசியும்-எழுதியும் வரும்படியான நிலைமைக்கு வந்திருக்கின்றோம். பலமின்றி ஸ்தூலித்து ஆக்கம் இழந்திருக்கும் மக்கள், அதற்குரிய பரிகாரத்தைக்கவனிப்பதில்லை. எப்படியேனும் தங்கள் காலத்தைப் பரிகாரமில்லாமலே நடத்த நாட்டம் கொள்கின்றனர். அதனால் அகால மரணம், நீடித்த நோய், புருஷன்-மனைவி-சினேகிதர்-இவர்களுடைய கட்டாயம் ஏற்படுவதாயின் ஏதேனும் ஒரு முடிவு செய்துகொள்ளப்படுகிறது. இதன் பொருட்டு ஒருவர் தினமும் மருந்துண்ணலை ஆரம்பஞ் செய்ய முற்படுகிறார். அவர் தன் ஆரோக்கியத்தைப் பற்றி புது ஆர்வத்தில் ஆரோக்கியத்திற்கான அவசிய விஷயங்களைப் பற்றி வெளிவரும் மருந்து விளம்பரங்களைக் காண்கிறார். அழகு அழகான மாதிரிகளில் அச்சியற்றப்பட்ட கண்கவரும் மருந்து வியாபார ஆரோக்கிய விளம்பரங்கள் தினமும் அவருடைய கவனத்தை இழுக்கவே, செலவில்லாமல் உடம்பால் செய்யத் தகுந்த பயிற்சியாகிய அற்பவிஷயம் அவருக்கு ஆரோக்கியத்தைக் கொடுத்துவிடுமோவென்று ஐயமுற்று அப்பயிற்சியில் நம்பிக்கை கொள்ளாதொழிகிறார். பயிற்சி செய்வது கஷ்டமென்றும் இருந்த விடத்திலேயிருந்து மருந்துண்ணுவது சுகமென்றும் கருதுவதால் அவர் விளம்பர மேதாவிகளின் யோசனைப்படியே நடக்க விருப்பமுங் கொள்கிறார். மருந்து நிபுணர்கள் மக்களின் ஜலதோஷ நோய் முதல் வயோதிக நோய்வரைக்கும் உள்ள எந்தவிதமான பிணிக்கும் பரிகாரமாகப் பெரிய விலைகளைப் பெற்றுக்கொண்டு சிறிய புட்டி மருந்துகளைக் கொடுக்கின்றனர்.

தேகாப்பியாசம் மதிப்புடையதாயிருக்க வேண்டுமானால், அது தேகத்தில் இறுகிய தசைப் பகுதிகளுக்குப் பயிற்சி கொடுப்பதோடு நிற்காமல் அதற்கு அதிகமாகவே பலன் தரக்கூடியதாயிருக்கவேண்டும். அதுவிஷயத்தில் யாவும் வியக்தமாயிருத்தல் வேண்டும். மூடமெந்திரம் எதுவும் கூடாது. பயிற்சியின் விசேட பலன்களில் ஒன்று என்னவென்றால் இரத்தச் சுழற்சியைப் புதுப்பித்தலாகும். கிட்டத்தட்ட ஒரு மணிநேரம் படிப்படியாய் நீடித்து இவ்வியக்கம் வியாபித்தால் இப்பலன் மிகவும் சிரேஷ்டமானதாய்க் கிடைக்கத் தக்கதாயிருக்கிறது.

அதோடு ஒரு பந்தயத்தில் உள்ளது போல இயக்கத்திலும் 'கொடு-எடு' என்னும் கொள்கை இருப்பதாயின் நிலைமையின் கடிப்பில் ஒருவன் தன்னையே மறந்துவிடக்கூடும். ஒருவன் கீர்த்தி வாய்ந்தவனாயினும், வருத்தமுற்றோனாயினும் அவன் நிலைமையின் போக்கில் தன்னை மறந்துவிடுகிறான். ஒருவன் தன்னையே மறந்துவிடத்தக்க சம்பந்தத்தைக் கண்டு பிடிக்கவேண்டின் இயக்கத்தைப்பற்றிச் சாதாரணமாய் அவன் போதிய நுண்ணறிவு படைத்திருக்கவேண்டியதவசியம்.

ஆகையினால் அநேக இளைஞர்களுக்கு ஆரோக்கியம்-அழகு-சக்தி முதலியவைகளுக்கேற்ற தேகாப்பியாச முறைகளில் நுண்ணறிவினை விருத்தி செய்தல் தகுதி மிகுந்த துறையாகும்.

ஆனால்இத்தகைய பிரச்சினையை மக்கள் எவ்விடத்தும் உரியவாறு அறிந்துகொள்ளத் தவறிவிடுகின்றனர்; என்பதற்கு அத்தாட்சிகள் இருக்கின்றன. படுக்கைவிட்டெழுந்தவுடன் ஆயிரக்கணக்கான மக்கள் தங்களுடைய அரைகளில் மின்சாரக்கிரண அப்பியாசங்கள் (ரேடியோ) செய்துவருகின்றனர். ஆனால் பிரடல ஆராய்ச்சியாளர்கள் அதனை எள்ளிநகையாடுகின்றனர். அதனை விசேட பலனற்றதென்று நிச்சயமாய்க் கூறுகின்றனர். அது ஒரு சிறிய விஷயந்தான். ஆயினும் ஆராய்ச்சியாளர் கருத்துகளுக்கு விரோதமாகவே அப் பயிற்சி நடைபெற்றுவருகிறது. அறியாமை மிகுந்த எண்ணற்றவர்கள் சன்னல்களுக்கு அருகில் நின்றுகொண்டு ஆழ்ந்த சுவாசப் பயிற்சி செய்துவருகின்றனர். அதனால் பிராண வாயுவை இரத்தத்தில் நிரப்பிக்கொள்ள முடியும் என்று வீணான நம்பிக்கை கொண்டவர்களாயிருக்கின்றனர். விஷயத்தின் சாமான்ய உண்மை அத்தகைய முடிவுக்கு மிகவும் விரோதமாயிருக்கிறது. ஒருவன் ஒரு சன்னலின் முன்னின்றுகொண்டு பகல்முழுதும் ஆழ்ந்து ஆழ்ந்து சுவாசத்தினை வாங்கி விட்டுக்கொண்டேயிருக்கலாம். ஆனால் பகற் பொழுது முடிந்ததும் அவனுடைய இரத்தத்திலாவது, சுவாசப் பைகளிலாவது அதிகமான பிராணவாயு இருக்கவே இருக்காது. அவன் சன்னலின் வழியாகச் சுவாசிக்க ஆரம்பம் செய்ததற்கு முன்னிருந்த அளவுக்கு அதிகமாகக் கொஞ்சமும் தேகத்தில் பிராணவாயு சேர்ந்திருக்க முடியாதென்பது உண்மை.

இந்த விஷயம் நோக்கங்களுக்கும் சாதனங்களுக்கும் உள்ள குழப்பத்தை விளக்குகிறது. நம்முடைய தசைகள் பலம் பெறுமாறு அவைகளுக்குப் பயிற்சி கொடுப்பதில்லை. ஆனால், தசைகளை வலுப்படுத்தும் முறைகளைப்பற்றி இருக்கும் விருப்பமுள்ள தேகப்பயிற்சிகளை நாம் மேற்கொள்ளுகிறோம். அதனால் தசைகள் நமக்கு எஜமானனாகாமல் வேலைக்காரனாகி விடுகின்றன.

ஆரோக்கியம் என்பது நடைபெறும் முழுவாழ்க்கையிலிருந்தே ஊற்றெடுத்தோவே தொன்று. ஆகையால் வாழ்க்கையின் சகலவிதமான துறைகளிலும் கவனம் செலுத்தப்படல் வேண்டும். மக்களின் பழக்க வழக்கங்கள், சம்பந்தா சம்பந்தங்கள், சாமர்த்தியங்கள், தொழில் முறைகள், தொழிற் புறம்பானவைகள் ஆகிய அனைத்தும் பரீட்சைக்கு உட்பட்டவைகளாயிருக்க வேண்டும். அத்தகைய பரீட்சைகளால் அவைகள் மாற்றப்படலாம்; அல்லது அவைகள் புதுப்புது அமைப்புகளைப் பெறலாம். ஒருவன் தன் தசைப்பகுதிகளுக்கு மட்டும் குறிவைத்துக் கவனம் செலுத்துவதற்குப் பதிலாகத் தன் முழுஉடம்பு—அல்லது முழு வாழ்க்கைக்கே தன் கவனத்தைச் செலுத்த வேண்டியவனாயிருக்கின்றான். இதுவே பிரச்சினையின் இருதய ஸ்தலமாகும்.

ஆகையால் மக்களின் நேர்த்தியான வாழ்வு என்றால் பிற்போக்கான வழக்கங்களுக்குரிய அப்பிசாசங்களை உண்டாக்குவதற்கும், தாழ்வுற்ற சந்ததியார்களுக்குச் சுவாசப் பயிற்சி ஏற்படுத்துவதற்கும் அப்பால் அதிகமான கவனத்தைப் பெற்றுள்ளதாக இருத்தல் வேண்டும்.

மக்களில் ஒவ்வொருவருக்கும் இதுவே சரியான பிரச்சினையாகும்:—

நான் என் வாழ்க்கையின் பொறுப்புகளை நிர்வகித்துத் தாங்க முடியுமா? கூடுமானவைகளைக் கண்டுபிடித்துக் கொள்ள என்னால் இயலுமா? என்வாழ்வினை நேர்த்தியான தாக்குவதற்கு அவசியமான நிபந்தனைகளை ஏற்படுத்திக் கொள்ள என்னால் ஆகுமா? என்பன போன்றவை முக்கியமாகும். இதற்கு மந்திரம் உதவாது; நிபந்தனைகள் ஆக்கப்பட வேண்டும்; நிபந்தனைகள் பூர்த்தியாக்கப்படும் பொழுதே அநுபவம் சித்தியாகிறது.

நகர வாழ்க்கையின் தேவைகளைக் குறித்து விழிப்புடன் இருக்கும் எந்தக் கூட்டத்தாரும், மக்களின்ஆக்கத்திற்கும் சிரமபரிகார இயக்கங்களுக்கும் ஆஸ்பதமான வசதிகளைப் பெரிதும் ஆழ்ந்து ஆராய்வர். ஒவ்வொரு தனிப்பட்ட நபருக்கும் தேக ஆரோக்கியநிலைமைகளை அடுத்த காரியங்களில் ஈடுபட சந்தர்ப்பங்கள் கொடுக்கப்பட வேண்டும். மனோஊக்கத்திற்கும் திருப்திக்கும் ஆஸ்பதமான காரியங்களில் இறங்கி வேலைசெய்ய ஒவ்வொருவருக்கும் சந்தர்ப்பம் கிடைக்கும்படி செய்ய வேண்டும். ஆசார அழகினுக்குரிய காரியங்களிலும் ஒவ்வொருவரும் செயல் ஆற்றல் வேண்டும். பழைய காலத்து அபாய அறிவிப்புகளெல்லாம் சென்று போய்விட்டன. மக்களின் ஆரோக்கியத்திற்கும் சந்தோஷத்திற்கும் என்று சமர்ப்பிக்கப்பட்ட புதிய சகதிகளே இப்போது தேவை.

தேகதத்துவ சம்பூரண கல்வி பெற்ற ஒருவன் சாமர்த்தியமும் நுண்ணறிவும் மலிந்து தங்கும் உடலினைக் கொண்டவனாயிருப்பான். அச்சாமார்த்தியங்களை இயக்க அவன் வலிமை பெற்றிருப்பான். அவைகளை அவன் சிரமபரிகார வழிகளில் உபயோகித்தல் கூடும். ஒருவன் அழகான உடையணிந்திருப்பான், ஆனால் அவனுக்கு எங்கும் போய்வர இடம் கிடைப்பதில்லை. அதுபோல், அழகான தேகக் கட்டினைப் பெற்ற ஒருவனுக்குச் சிரமபரிகாரத்திற்கான நுண்ணறிவும் கூட இருப்பதில்லை. வன்மைமிக்க தேகத்தையுடைய ஒரு குடியானப்பையன் தன் உழைப்பிற்குப் பிறகு தன்னைச் சந்தோஷப் படுத்திக் கொள்ளப் போதிய அறிவு பெற்றவனாயிருந்திராவிட்டால், அவன் தேகபலமற்ற தரித்திரமிகுந்த ஒரு நகரத்தானைப் போன்ற பூரண வாழ்க்கைச் சுகத்தை அடையலாயக் கற்றவனாகவே கருதப்படுவான். உண்மையில் தேகதத்துவக் கல்வி யென்றால் அது ஒரு பிரத்தியேகத் தொழில் பற்றியதல்ல; நடனப்பயிற்சி சம்பந்தமான வரிசைமுறைகளுமல்ல, எந்தவிதமான பிரத்தியேக சாமார்த்தியமுமல்ல; ஆனால் அது மக்களின் வாழ்க்கை முறையே யாகும்.

ஆகவே மானத ஒழுக்க முறைகளும் தேக—ஆத்ம ஒழுக்க முறைகளும் மக்கள் வாழ்வின் ஐக்கிய நியதிகளுக்கு முன்பு ஒவ்வோர் அம்சத்திலும் தகர்ந்து போகத் தக்கனவாகும். தற்கால கைத்தொழில் உலகத்தின் கஷ்டங்களை ஒவ்வொருவரும் அறிதல் வேண்டும். அவ்வாழ்க்கையின் பலதுறைகளிலும் ஏற்படும் குறைவுகளைப் பூர்த்தி செய்யத்தக்க நஷ்ட ஈடுகள் வழங்கப்படவேண்டும். வெளித்தோற்றத்தில் காணப்படும் மூட நம்பிக்கை மாதிரிகளும், செயற்கை முறைகளை ஆதரிக்கும் ஜனங்களின் போலி மதிப்புகளைக் கொண்ட யோசனைகளும், அவையவைகளுக்கு உயரிய உண்மைகளைப்பொறுத்து மதிப்பிடப்படல் வேண்டும். அவையவை சம்பந்தப்பட்ட, மோசக்கருத்துப் படிந்த நடத்தைகளும் வெளியிடப்படல் வேண்டும். மக்கள் ஒவ்வொருவரும் தத்தம் நிலைமைகளைப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டியது அவசியம். அங்ஙனம் பரிசீலனை செய்யுங்கால் தேக ஆக்க முறைகளைச் சார்ந்த ஜீவசக்தியினைப் போற்றி வளர்ப்பதற்குரிய சாதனங்களை யெல்லாம் பொறுக்கி எடுத்துக்கொள்ளவேண்டும். அதோடு சிரமபரிகார வழிகளை உணர்த்தும் நுண்ணறிவினை வளர்க்கக்கூடியவற்றையும், ஓய்வு நேர இன்பத்தினைப் பெருக்கக் கூடியவற்றையும் தேர்ந்து பற்றிக் கொள்ளவேண்டும்.

"வேண்டும் என மேற்கூறப்பட்டவைகளை நாம் யாண்டும் பெற்றிருந்தால், வாழ்வைத் தீண்டும் பல துன்பம் நம்மை எவ்வாண்டும் வந்தணுகா.

